# PARRY'S PAGE

## இதோ மேஜிக்

ஹலோ, நண்பர்களே! எங்கள் கைகளிலே தொப்பிகளும், மந்திரக் கோல்களும். ஏன் தெரியுமா? என்ன, மேஜிக் என்றா சொன்னீர்கள்? நீங்கள் கெட்டிக்காரர்கள் தாம்! காராமில்க், காஃபிபைட், ட்ரை-மீ நாம் அனைவரும் மேஜிக் நிபுணர்கள் ஆகிவிட்டோம். எங்கள் மேஜிக்கை நீங்கள் காண முடியாவிட்டாலும், நீங்கள் கற்றுக்கொள்ள சில தந்திரங்கள் சொல்லித் தருவோம்... உங்கள் நண்பர்கள் ஆச்சரியப் படுவார்கள்.




Pic. 1

## பின்க்ளிப் பிடி

ஓரடி நீளமும், ஈரடி அகலமும் உள்ள ஒரு காகிதத்தை மடித்து, இரண்டு பேப்பர் கிளிப்புகளை இதுபோல இணையுங்கள். பிறகு, ஜூ மந்திரகாளி! சிதறிய கிளிப்புகள் இரண்டும் ஒன்றாய் வரும்.



இதைச்செய்கையில், பேப்பரின் இரு முனைகளையும் சடக்கென இழுத்தால் கிளிப்புகள் இரண்டும் மேலெழும்பி, கீழே வரும்போது ஒன்றா யிணைந்து வரும்.

பி.கு.
இதை நண்பர்களுக்குச் செய்து காட்டுமுன்பு, இருமுன்ற பழகுதல் நல்லது.







## திடீர் திகில்

உங்கள் இடது கையை முன்னால் நீட்டுங்கள். உங்கள் கை உங்களை நோக்கி இருக்கும்படி, கையை வலதுபுறம் நோக்கி வைக்கவும். கட்டை விரலும், (படத்தில் காட்டியபடி) உங்களை நோக்கி வளைந்திருக்கட்டும். உங்கள் வலது கையை, காட்டியுள்ள அதற்கெதிராக வைத்து, வலது சுட்டு விரலால் இணைப்பை மறையுங்கள். இப்போது, வலது கையை இடது சுட்டுவிரல் வழியாக நகர்த்துங்கள். ஐயோ! இடது கட்டை-விரல் நுனியை வெட்டுவது போலவே இருக்கும். (உங்கள் முன் நிற்கும் நண்பர்களுக்கு இது எப்படித் தோன்றும் எனக் காட்டும் படம்-2) சீக்கிரம் பழைய நிலைக்கே வாருங்கள், யாரேனும் பயந்து அலறுவார்கள்.



Pic. 2

சரி, நண்பர்களே! இப்போது இவ்வளவுதான். இன்னும் ஏராளமான டிரிக்குகள் உள்ளன. ஆனால் இங்கே இடம் தானில்லை. இதையெல்லாம் குடும்பத்தினருக்கும் நண்பர்களுக்கும் காட்டி மகிழ்வீர்கள் என நம்புகிறோம்.

எங்களுக்கு எழுதுங்கள். உங்கள் நண்பர்களான காஃபிபைட், காராமில்க், ட்ரை-மீ மற்றும் நானும் உங்கள் கடிதத்திற்காக காத்திருப்போம். டாட்டா!




# மேகி கிளப் பரிசுகள், இலவசம். வனவிலங்குகளுடன் பெறுவீர், உல்லாசம்!



மேகி "ஆபரேஷன் வைல்ட்லைஃப்" விளையாட்டில் வனவிலங்குகளைக் காப்பாற்றுங்கள்!




மேகி "கிங் ஆஃப் தி ஜங்கிள் கேம்" விளையாட்டில் வனத்தை வெல்லுங்கள்!

குழந்தைகளே! மேகி கிளப்பில் சேருங்கள். வருடம் பூராவும் கொண்டாட்டம் பெறுங்கள். நியூஸ் லெட்டர்கள், பரிசுகள், விளையாட்டுகள் இன்னும் நீங்கள் செய்வதற்கு எத்தனை எத்தனையோ!

இந்த சின்னத்தை மேகி நூடுல்ஸ் 5 காலி உறைகளின் முன்பக்கத்திலிருந்து வெட்டி எடுத்து எங்களுக்கு அனுப்புங்கள். உங்கள் பெயர், விலாசத்துடன் உங்களுக்குப் பிடித்த பரிசையும் குறிப்பிட்டு எழுதுங்கள். நீங்கள் மேகி கிளப் உறுப்பினராக இருந்தால் உறுப்பினர் எண்ணையும் குறிப்பிட மறந்துவிடாதீர்கள். இதுவரை உறுப்பினர் ஆகவில்லை என்றால் இப்போது ஆகலாம்.

மேலே குறிப்பிட்ட விவரங்களை அனுப்பும்போது, உறுப்பினர் ஆக விரும்புவதாகவும் எழுதுங்கள். நாங்கள் உங்கள் பரிசுப் பொருளுடன் இலவச மேகி கிளப் உறுப்பினர் அட்டையையும் அனுப்புவோம்.

எங்கள் விலாசம் :
**மேகி கிளப்**
தபால்பெட்டி எண் : 5788,
புது டில்லி-110 055.



மேகி "ஜாது ஜங்கிள்" மூலம் சொந்தமாக ஒரு காட்டை உருவாக்குங்கள்!




மேகி "பர்ட்ஹவுஸ்" உருவாக்குங்கள்!




ஆர்ச்சி காமிக்





மேகி வேர்ல்ட் ஆஃப் அனிமல்ஸ் வினாடி வினா! நீங்கள் பெறும் ஒவ்வொரு 3 இலவசப் பரிசுகளுக்கும் உங்களுக்கு மேகியின் "வேர்ல்ட் ஆஃப் அனிமல்ஸ்" வினாடி வினாவை உங்களுக்கு நாங்கள் அனுப்புவோம். அதில் வன விலங்குகளைப் பற்றிய வியப்பூட்டும் தகவல்கள் நிறைந்துள்ளன. விளையாட்டில் விவரங்கள் தரப்பட்டுள்ளன.






MAGGI 2-Minute noodles

மேலும் பெறுவீர்: இதுவரை "லாஸ் ஆஃப் ஜங்கிள் கேம்" நீங்கள் பெறவில்லையென்றால், இப்போது பெற்றுக்கொள்ளுங்கள்!




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி

## கல்வி: பலமான அஸ்திவாரம் தேவை

தற்போது பிரதம மந்திரியாக உள்ள திரு. நரசிம்மராவ்தான் முன்பு ராஜீவ் காந்தியின் அமைச்சரவையில் கல்வி அமைச்சராக இருந்தபோது தேசியக் கல்விக் கொள்கையை உருவாக்கினர். எனவே புதிய மத்திய அரசு அமைந்ததும் 1986ல் செயல்படுத்தப் பட்ட அதே கல்விக் கொள்கையைப் பின்பற்றும் என அறிவிக்கப் பட்டது கண்டு வியப்பு இல்லேதானே!

கல்வி என்பது புதிய மாற்றத்திற்கான ஒரு சாதனம். நாம் விஷ்ணுசர்மா என்ற ஆசிரியர் எப்படி மூன்று அரசகுமாரர்களே ஆட்சிப் பொறுப்பை ஏற்று நடத்தும் தகுதிபெறச் செய்தார் என் பதை அறிந்தே இருக்கிறோம். அவர் இந்த சாதனேயைச் செய்யக் கையாண்ட முறை கதைகளேச் சொல்வதன் வாயிலாகத்தான். இக்கதைகளே பஞ்சதந்திரம் என்ற பெயரில் தொகுத்து அளிக்கப் பட்டன.

எனவே கல்வி தனிமனிதனே மாற்ற உதவுகிறது. இவ்வித மாற்றத்தால் அவன் தன் சமுதாயத்தையும் பண்பாட்டையும் உயரச் செய்கிறுன். உண்மையான கல்வி தனிமனிதன் ஒருவனே முற்றிலும் மாற்றி உயர்விற்கான வழி செய்வதேயாம்.

பொதுவாக நிலவும் கருத்து கல்வியால் நாம் விரும்பும் உயர்வை அடைய முடியவில்லே என்பதே. நம் கல்விக் கூடங்கள் ஆயிரக்கணக்கான மாணவர்களே பயில்வித்து அனுப்புகின்றன. ஆனல் அவர்கள் எல்லோருக்கும் கிடைக்கும் வேலே வாய்ப்பு மிகக் குறைவு. இதனல் சமுதாயத்தில் அமைதி இல்லாது போகிறது.

ஆரம்பக் கல்வியைப் பரவலாக்கி அதன் வாயிலாக எழுத்தறி விப்பை அதிகரிப்பதுதான் தற்போதைய தேவை.

மதிமுகம்: 8 9 செப்டம்பர் 1991 புன்னகை: 3

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00

CHITRA

திரும்பத்திரும்ப ஒரே மாதிரி தோற்றமும், சுவையும்
கொண்ட சாக்கலேட் என்பது இனி இல்லவே இல்லை!






கடித்துச் சுவையுங்கள் கேம்ப்கோ
ஒயிட்டை.. கண்டுகொள்ளுங்கள்
மாறுபட்டதோர் சுவையை! ஆம்,
நீங்கள் இதுவரை அனுபவித்திராத
முற்றிலும் மாறுபட்ட ஒரு இனிய
சுவையை அளிக்கிறது கேம்ப்கோ
ஒயிட் க்ரீமி சாக்கலேட்... ஒரு
முறை சுவைத்திட்டால் மீண்டும்
மீண்டும் சுவைக்கத் தூண்டிடும்!

இந்தியாவின் மிகப்பெரிய,
நவீன ஆலை அளிப்பது.




கேம்ப்கோ லிமிடெட்
மங்களூர்.




R K SWAMY/BBDO CL 9321




# கம்போடியாவில் அமைதி

கம்போடியா நாட்டில் கடந்த 12 ஆண்டுகளாக நடந்து வந்த உள்நாட்டுப் போர் ஒருவிதமாக முடிவுக்கு வந்துள்ளது. ஐ. நா சபையின் ஆதரவில் நிறுவப்பட்டுள்ள சுப்ரீம் தேசியக் கௌன்சிலில் பங்கேற்ற இந்நாட்டின் புரட்சிக் குழுக்கள் மூன்றும் தம் போராட்டத்தைக் கைவிட்டு அமைதிக்கான ஒப்பந்தம் செய்து கொண்டு உள்ளன.

கம்பூசியா எனப்படும் கம்போடியா இரண்டாவது உலகப் போரில் ஜப்பான் அதனை ஆக்கிரமிப்பதற்கு முன் பிரஞ்சுக்கார ஆட்சியின் கீழ் பிரஞ்சு இந்தோ-சீனு என்று பெயர் பெற்றிருந்தது. 1945ல் ஜப்பான் தோற்றபின் அது மீண்டும் பிரான்ஸின் வசமாகியது. ஆனால் 1953ல் பிரான்ஸ் அங்கிருந்து வெளியேறவே அது சுதந்திர நாடாகியது.

ஆனால் அமெரிக்க உதவிபெற்ற லாஸ்நொல் 1970ல் புரட்சி செய்து அதுவரை பதவியில் இருந்த பிரின்ஸ் சிஹானேக்கின் ஆட்சியைப் போக்கியது. சிஹானேக் நாட்டைவிட்டு வெளியேறினர். ஐந்தாண்டுகளுக்குப் பிறகு கேமர்

ரௌக் தலைமையில் கொரில்லாக் கள் ஆட்சியைக் கைப்பற்றினார் கள். ஆனால் பட்டினிச்சாவுகள், பயங்கரக் கொலைகள் காரணமாய் மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு அந்த ஆட்சி ஒழிந்தது. அண்டை நாடான வியட்நாம் தம் படைகளை அனுப்பி 1979ல் ஹாங்க் சாபி ரிஸ் தலைமையில் ஒரு புதிய அர சாங்கம் அமைந்தது. ஆனால் கம் போடியாவிலிருந்து வியட்நாம் படைகள் வெளியேறத் தொடங் கியதும் மீண்டும் உள்நாட்டுப் போர் தொடங்கியது. இதனால் பனி ரெண்டு ஆண்டுகள் அந்நாட்டின் பொருளாதாரம் சீர்குலந்தது.

இந்தோனேஷியா தலைநகர் ஜாகர்த்தாவிலும் தாய்லாந்திலும் நடந்த பேச்சு வார்த்தைகளின் பயனாக போரிட்டுக் கொண்டிருந்த மூன்று குழுக்களும் ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டன. இக்குழுக்கள் சுப்ரீம்தேசியக் கௌன்சிலில் இடம் பெற்றன. பிரின்ஸ் சிஹா னேக் இதன் தலைவர். தற்போதை யப் பிரதமர் சான்னென் துணைத் தலைவர்.

சிஹானேக் நவம்பரில்தான் நாடு திரும்பப் போவதாக அறி வித்ததால் சுப்ரீம் தேசியக் கௌன் சில் தாய்லாண்ட் தலைநகர் பாங் காக்கில் தற்போது செயல்படும். நம் நாட்டிற்கும் கம்போடியா வுக்கும் பழங்காலத்திலிருந்தே தொடர்பு உண்டு. உலகின் மிகப் பெரிய ஆலயம் அங்கார்வாட் கம் போடியாவில் உள்ளது. பனி ரெண்டாம் நூற்றுண்டில் கட்டப் பட்ட இதில் ஹிந்து பௌத்த கோவில்கள் சீர்குலைந்து கிடக்கின் றன. ஒரு காலத்தில் இது நாட்டின் தலைநகராக இருந்த இடமாகும்.





# மூன்று பரீட்சைகள்

முத்தைய்யா என்ற நிலச்சுவான்தாரருக்குத் தம் கணக்கு வழக்குகளைப் பார்த்துக் கொள்ள ஒரு உதவியாளர் தேவைப்பட்டது. இதை அறிந்த கைலாசம் என்பவன் அவனை அணுகித் தனக்கு அந்த வேலையைக் கொடுக்குமாறு வேண்டினான்.

முத்தைய்யாவும் ''நீ என்னைவிட கெட்டிக்காரன் என நிரூபித்தால் உன்னை வேலையில் வைத்துக் கொள்கிறேன். இதற்காக உன்னை மூன்று முறை பரீட்சிப்பேன். முதலாவதாக, எனக்கு சுப்பு என்பவன் இருநூறு வராகன்கள் கடன் கொடுக்க வேண்டும். பல வருடங்களாக அதைக் கொடுக்காமலேயே இருக்கிறான். அதை வசூலித்து வந்தால் இரண்டாவது பரீட்சையைக் கூறுகிறேன்'' என்றான்.

கைலாசமும் ''இன்னும் சற்று நேரத்தில் வசூலித்துத் தருகிறேன். நான் இப்போதே சுப்புவின் வீட்டிற்குப் போகிறேன். ஒரு பத்து நிமிஷம் கழித்து நீங்கள் அங்கே வாருங்கள்'' என்று கூறிவிட்டுச் சுப்புவின் வீட்டிற்குச் சென்றான்.

அவன் சுப்புவைக் கண்டு ''ஐயா! ஒரு அவசரத் தேவைக்கு இருநூறு வராகன்கள் எனக்கு வேண்டும். எல்லோரும் ஒரு வட்டிதான் வாங்குகிறார்கள். நான் உங்களுக்கு இரண்டு வட்டி கொடுக்கிறேன்.'' என்றான். அதைக்கேட்ட சுப்பு ஒரு ரூபாய்க்கு இரண்டு ரூபாய் வட்டி கிடைக்கிறதே என்று மகிழ்ந்து இருநூறு வராகன்களை எண்ணி அவனிடம் கொடுத்து ''சற்று இரு, பத்திரம் எழுதிக்கொண்டு வருகிறேன்.'' என்று கூறி உள்ளே சென்றான்.

இதேசமயம் முத்தைய்யா வரவே,

—சிவனார் செல்வன்—



முத்தைய்யா கைலாசத்தைப் பாராட்டி "சரி. அடுத்த பரீட்சை இதுதான். எனக்கு இந்த ஊரில் இரண்டு வீடுகள் உள்ளன. ஒன்றில் நான் இருந்து வருகிறேன். மற்றதை சொக்கன் என்பவனுக்கு வாடகைக்கு விட்டிருக்கிறேன். அவன் வாடகையை ஒழுங்காக கொடுத்து விடுகிறான். ஆனால் வீட்டைக் காலி செய்து கொடு, என் பெண்ணும் மாப்பிள்ளையும் வருகிறார்கள் என்றேன். அவனோ காலி செய்ய மறுக்கிறான். அடுத்தமாதம் என் மாப்பிள்ளை வருகிறார். அதற்குள் அவனைக் காலி செய்ய வைக்க வேண்டும். இதைச் செய், பார்க்கலாம்" என்றான்.

கைலாசம் "இதோ உங்கள் கடன் இருநூறு வராகன்" எனக்கூறிக் கொடுத்தான். பத்திரம் எழுதி எடுத்து வந்த சுப்பு முத்தைய்யாவைக் கண்டதும் "ஆகா! உங்களுக்கு கொடுக்கத்தான் இந்தப் பணத்தை வைத்திருந்தேன். நீங்களே வந்து வாங்கிக் கொண்டு விட்டீர்கள். ரொம்ப சந்தோஷம். நான் இவன் கேட்ட பணத்திற்கு வேறு பணம் கொடுக்கிறேன்" என்றான்.

அப்போது கைலாசம் சுப்பு எழுதி எடுத்து வந்த பத்திரத்தை வாங்கிக் கிழித்துவிட்டு "நான் இவரிடமே ஒரு வட்டிக்கு எனக்கு வேண்டிய பணத்தை வாங்கிக் கொள்கிறேன்" என்று கூறி முத்தைய்யாவுடன் சென்றான்.

கைலாசமும் அன்று முதல் சொக்கனின் வீட்டிற்குப் போய் அவர்களோடு நெருங்கிப் பழகினான். குழந்தைகளுக்கு மிட்டாய் வாங்கித் தந்தான். சொக்கனின் மனைவிக்கும் அவ்வப்போது கத்திரி, வெண்டை, புடலை, வாழைக்காய் என்று கொடுத்து அவளது நன்மதிப்பையும் பெற்றான்.

ஒரு நாள் அவன் சொக்கனிடம் "ஏன் இந்த வீட்டிலேயே இருந்து அவஸ்தைப்படுகிறீர்கள்? இதை காலி செய்து விட்டு அண்ணாமலையின் வீட்டில் போய் இருங்கள். நான் வாடகை பேசி முடித்துத் தருகிறேன்" என்றான்.

சொக்கனோ "ஓகோ! இப்

படிச் சொல்லும்படி முத்தைய்யா உன்னிடம் சொன்ஞனு? என்ன ஆனுலும் சரி நான் இந்த வீட்டைக் காலி செய்யப் போவது இல்லை" என்ருன். கைலாசமோ "நான் உன் நல்லதற்காகத்தான் சொன்னேன். பிறகு உன் இஷ்டம்" என்ருன்.

மறுநாளே கைலாசம் அண்ணுமலையின் வீட்டை வாடகைக்கு எடுத்துக் கொண்டான். அன்று மாலை சொக்கனின் வீட்டிற்குப் போய் அவர்கள் சாப்பிடும் உணவில் மயக்க மருந்தைக் கலந்து விட்டான். அந்த உணவை உண்டு சொக்கனும் அவன் மனைவி மக்களும் நினைவு இழந்து விழுந்து கிடந்தனர்.

அப்போது கைலாசம் முத்தைய்யாவின் ஆட்களோடு வந்தான். சொக்கனையும் அவனது குடும்பத்தினரையும் தான் வாடகைக்கு எடுத்த அண்ணுமலையின் வீட்டில் கொண்டுபோய்ப் படுக்க வைத்தான். சொக்கனின் தட்டு முட்டு சாமான்களை எல்லாம் அந்த ஆட்கள் எடுத்துப்போய் அண்ணுமலையின் வீட்டில் வைத்தனர். கைலாசம் உடனே சில சாமான்களை முத்தைய்யாவின் வீட்டிருந்து எடுத்து வரச்சொல்லி அவற்றைக் காலியான முத்தைய்யாவின் வீட்டில் வைக்கச் சொன்ஞன். இவ்வாறு அந்த வீடு முத்தைய்யாவின் வசத்திற்கு வந்துவிட்டது.



மறுநாள் மயக்கம் தெளிந்த சொக்கன் தானும் தன் சாமான்களும் புதிய வீட்டில் இருப்பதை கண்டு திகைத்துப் போஞன். வேறு வழியின்றி அவன் அண்ணுமலையின் வீட்டிலேயே இருக்க வேண்டியதாயிற்று.

முத்தைய்யா கைலாசத்தின் இந்த இரண்டாவது செயலையும் பாராட்டி விட்டு "சரி. மூன்ருவதை கூறுகிறேன். என் மனைவியை, ஒரு நாளைக்கு மௌனவிரதம் ஏற்கச் செய்யவேண்டும். அவள் மௌன விரதம் இருக்க மறுக்கிருள்" என்ருன்.

கைலாசம் அன்று மாலையே முத்தைய்யாவின் மனைவியைக்



இதைக் கட்டிக்கொள்ள இஷ்டம் இல்லை என்றால் சொல்லி விடுங்கள் உங்களோடு எதிலும் போட்டி போடும் அந்த அண்ணாமலையின் சம்சாரத்திற்குக் கொடுத்து விடுகிறேன்'' என்றான்.

முத்தையாவின் மனைவியும் ''அந்த ராங்கிக்காரிக்கா கொடுக்கப் போகிறாய்? இதைக் கட்டிக் கொண்டு விட்டால் அவள் தலை கால் தெரியாமல் துள்ளுவாளே! வேண்டாம். எனக்கே கொடு. நான் கட்டிக் கொண்டு மௌனவிரதம் இருக்கிறேன்'' என்று கூறித் தாயத்தை அவனிடமிருந்து வாங்கிக் கொண்டாள்.

மறுநாளே அவள் அந்தத் தாயத்தை தன் வலது கையில் கட்டிக் கொண்டு மௌனவிரதம் ஏற்றாள். இதைக் கண்டு முத்தையா ஆச்சரியப்பட்டான். அவன் கைலாசத்தின் திறமையைத் தனக்குள் பாராட்டினான்.

அவன் கைலாசத்தை அழைத்து ''நீ என்னவோ நான் வைத்த மூன்று பரீட்சைகளிலும் வெற்றி பெற்றுக் கெட்டிக்காரன் என்று நிரூபித்து விட்டாய். ஆனால் நீ என்னை விட கெட்டிக்காரன் என்பது நிரூபிக்கப்படவில்லை. ஏனென்றால் நான் என் மூன்று வேலைகளையும் சாதுரியமாக உன்னை அமர்த்தி முடித்துக் கொண்டேன்'' என்றான்.

அதைக்கேட்ட கைலாசம் சற்

கண்டு ''அம்மா! நான் ஒரு அபூர்வத் தாயத்தை சக்தி வாய்ந்த ஒரு யோகியிடமிருந்து வாங்கி வந்திருக்கிறேன். அதை நீங்கள் உங்கள் வலது கையில் கட்டிக் கொண்டால் இந்த வட்டாரத்திலுள்ள எல்லாப் பெண்களையும்விட நீங்கள் மிக அழகாகத் ஆகிவிடுவீர்கள். ஆனால் இதை கட்டிக்கொண்ட நாளில் நீங்கள் யாரிடமும் எதுவும் பேசாமல் மௌனவிரதம் இருக்க வேண்டும். அப்போதுதான் இந்த தாயத்தின் சக்தியால் உங்கள் மதிப்பும் சக்தியும் உயர்ந்து என்றும் குறையாமல் இருக்கும்'' என்றான்.

முத்தையாவின் மனைவி சற்று யோசிக்கலானாள். அப்போது கைலாசம் ''என்ன யோசிக்கிறீர்கள்?

றும் ஆச்சரியப்படாமல் "நீங்கள் சொல்வது ஒருவகையில் சரி. ஒரு கெட்டிக்காரன் தன்னைவிட கெட்டிக் காரனுக இருப்பவனைத் தன் கீழ் வேலைக்கு வைத்துக் கொள்ள மாட் டான். நான் உங்களை விட கெட்டிக் காரன் என்பதை நீங்கள் கண்டு கொண்டீர்கள். இதை நீங்கள் ஒப்புக் கொண்டு விட்டால் உங் களை எனக்கு வேலை கொடுக்கும்படி வற்புறுத்த மாட்டேன்" என்ருன்.

அப்போது முத்தைய்யா "நீ என்னை விட கெட்டிக்காரன் என்றே ஒப்புக் கொள்கிறேன். நீ உன் அறி வைக் கொண்டு உன் காலிலேயே நிற்க முடியும். நான் உன்னிடம் தோற்றுவிட்டேன்! ஆனுல் வென்ற வனுக்கு நான் வேலை கொடுப்ப தில்லை என்று முதலிலேயே தீர் மானித்து விட்டேன்" என்ருன்.

இவர்கள் இப்படி பேசிக்கொண் டிருக்கும் போதே முத்தையாவின் மகள் மீனு அங்கு வந்தாள். அவள் தந்தையிடம் "அப்பா நீங்கள் உங் களைவிட கெட்டிக்காரராக இருப்ப வருக்கே மணம் செய்து வைப்பதா கக் கூறி இருந்தீர்கள். எனவே இவர் இங்கு வந்து என்னை மணந்து கொள்ள விரும்புவதாகக் கூறிய போது நான் அவரிடம் அவர் உங் களைவிட கெட்டிக்காரர் என்பதை நிரூபித்தாக வேண்டும் எனக் கூறி னேன். இப்போது அதை நிரூபித்து விட்டார். எனவே நீங்கள் எங்கள் திருமணத்தை நடத்த வேண்டும்" என்ருள்.

அப்போது முத்தைய்யா கைலா சத்திடம் "நீ உண்மையிலே என்னை விட கெட்டிக்காரன்தான். இதில் சந்தேகமே இல்லை. இப்படிப்பட்ட கெட்டிக்காரனை என் மகள் மணந்து கொள்வதாகக் கூறும்போது நான் அதற்குத் தடையா சொல்வேன்? என்ருன்.

கைலாசத்திற்கும் மீனுவுக்கும் ஒரு நல்ல முகூர்த்தத்தில் திருமணம் நடந்தது. அவர்களும் நீண்டகாலம் சுகமாக வாழ்ந்தனர்.



# உன்னைப் பார்க்க முடியாதே?

தேவநாதன் ஆஸ்திகர். கடவுள் பக்தியில் ஈடுபட்டுப் புராணப் பிரசங்கங்கள் புரிந்தும் வந்தார். இவரது போக்கை எதிர்த்து நாஸ்திக வாதம் புரிந்து வந்தவன் அறிவழகன். இவ்விருவரும் பரம விரோதிகள் என்பது ஊர் அறிந்த விஷயம்.

ஒருமுறை நாராயணன் கடும் நோய்வாய்ப்பட்டு படுத்த படுக்கையானார். அவரது நிலை மோசமாகி அவர் இறந்துவிடுவாரோ என்றாகிவிட்டது. எனவே அவரைக் காண மக்கள் அவரது வீட்டின் முன் கூடினார்கள். அவருக்கு மருந்து கொடுக்கும் வைத்தியரோ அவரைப் பார்க்க யாரையும் அனுமதிக்கவில்லை.

அப்போது நாராயணன் வெளியே கூட்டத்தில் அறிவழகன் இருந்தால் அவனை மட்டும் அழைத்துவரச் சொன்னார். அறிவழகனும் "என்னை மட்டும் ஏன் பார்க்க விரும்பினீர்கள்?" என்று கேட்டான்.

நாராயணனும் "நான் இறந்துபோய் சொர்க்கத்திற்குப் போனால் அங்கு எல்லோரையும் பார்க்க முடியும். ஆனால் உன்னைப் பார்க்கமுடியாதே. அதனால் உன்னை இங்கேயே பார்த்துவிட்டு உயிர் விடலாம் என நினைத்தேன்" என்றார்.






## 6

*[சதானந்த முனிவர் வினோதனை உருவாக்கி அவனுக்கு அற்புத சக்திகளை அளித்தார். அவன் தனது சக்தியை ஏழை, எளியவர், துன்பப்படுவோர் போன்றவர்களைக் காக்க உபயோகிக்க வேண்டும் என அவர் அவனுக்கு அன்புக் கட்டளை இட்டார். அதன்படியே அவன் மக்களைத் துன்புறுத்திய ஒரு கொள்ளைக் கூட்டத்தைப் பிடித்து மன்னனிடம் ஒப்படைத்தான். அதன் பிறகு—]*

**வி**னோதன் சுகுமாரனின் இருப்பிடத்திற்குப் போய் அவனைக் கூப்பிட்டான். அது இரவுவேளை. சுகுமாரன் தான் படுத்திருந்த கட்டிலிலிருந்து எழுந்து வந்தான் அவன் வினோதனை வணங்கி "ஐயா! இந்த வேளையில் இங்கே வரக் காரணம் என்னவோ?" என்று பணிவுடன் கேட்டான்.

வினோதனும் "உன்னால் ஒரு வேலை ஆக வேண்டி இருக்கிறது. நீ இப்போதே என்னுடன் கிளம்ப வேண்டும்" என்றான். சுகுமாரனும் "ஆகா! வருகிறேன் என்ன விஷயம் என்று கூறுங்கள்" என்றான். வினோதனும் "நான்கு சிறுவர்கள் ஒரு ஆபத்தில் சிக்கிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களை நாம் இப்போதே போய்க் காப்பாற்றியாக வேண்டும். சற்றும் தாமதிக்கக்




களிடம் "என்ன தம்பிகளா! நீங்கள் கப்பலுக்குள் போய்ப் பார்த்ததே இல்லை போல் தெரிகிறதே. நீங்கள் அதைப் பார்க்க விரும்பினால் நான் என் படகில் அழைத்துப் போய்க் காட்டுகிறேன். வருகிறீர்களா?" என்று கேட்டான்.

அச்சிறுவர்களும் தமக்குள் "ஆகா! நம் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம். நாம் அக்கப்பலைப் பார்க்க நினைத்த மாத்திரத்திலேயே ஒருவர் படகில் வந்து நம்மை அழைத்துப் போய்க் கப்பலைக் காட்டுவதாகக் கூறுகிறார். நாம் இவரோடு படகில் போய் அக்கப்பலைப் பார்த்து விட்டுத் திரும்பி விடலாம்" என்று மகிழ்ச்சியுடன் பேசிக் கொண்டார்கள்.

சிறுவர்களும் உற்சாகத்துடன் அந்த மனிதனுடன் சென்றார்கள். எனக்கு அவன் மீது சந்தேகம் ஏற்படவே நான் அவர்களின் கண்களுக்குத் தென்படாமலேயே அவர்களைப் பின்தொடர்ந்து சென்றேன். கப்பலுக்குள் சென்றதும் அந்த மனிதன் அச்சிறுவர்களுக்கு அக்கப்பலின் எல்லாப்பகுதிகளையும் சுற்றிக் காண்பித்தான். சிறுவர்களின் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. அப்போது அந்த மனிதன் அச்சிறுவர்கள் உண்ணத் தின்பண்டங்களைக் கொடுத்து குடிக்க இனிப்புப்பானத்தையும் அளித்தான். சிறுவர்கள் அவற்றைச் சாப்பிட்டுப் பானத்தைக் குடித்ததும் தம் நினைவிழந்து விழுந்

கூடாது" என்றான்.

சுகுமாரனும் "ஆமாம். அந்தச் சிறுவர்கள் எப்படி அந்த ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டார்கள்? நீங்கள் போகும் வழியில் அது பற்றி விவரமாகக் கூறுங்கள்" என்றான். வினோதனும் சுகுமாரனை அழைத்துக் கொண்டு அச்சிறுவர்களைப் பற்றிக் கூறியவாறே சென்றான்.

"நான் இன்று காலை கடற்கரை ஓரம் போய்க் கொண்டிருந்தபோது நான்கு சிறுவர்கள் அங்கு நின்று கொண்டு சற்று தூரத்திலிருந்த ஒரு கப்பலை வேடிக்கையாகப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அப்போது கப்பலிலிருந்து ஒருவன் இறங்கி ஒரு படகில் அமர்ந்து அவர்களை நோக்கி வந்தான். அவன் அவர்

தனர். சற்று நேரத்திற்குப்பின் அந்தக் கப்பல் மெதுவாகக் கிளம்பியது.

அந்த மனிதன் கப்பலின் சொந்தக்காரன். அடிமை வியாபாரி. அவன் அச்சிறுவர்களைத் தொலை தூரத்திலுள்ள தீவிற்குக் கொண்டு போய் அவர்களை அடிமைகளாக விற்று விடுவதே அவனது நோக்கம். இதை அவன் தன் ஆட்களிடம் கூறி அச்சிறுவர்களை அக்கப்பலின் ஒரு அறைக்குள் பத்திரமாக வைத்துப் பூட்டியதைப் பார்த்தேன். அந்த அறையிலிருந்து சிறுவர்களைக் காப்பாற்ற வேண்டும். நீ என்னை உறுதியாகப் பிடித்துக்கொள். நீயும் நானும் கடல்வழியே சென்று அக்கப்பலை அடைய வேண்டும்.

அங்கு கப்பலில் நீ அந்தச் சிறுவர்களோடு சேர்ந்துப் படுத்துக் கொள்ள வேண்டும். அப்போது எண்ணிக்கை விஷயத்தில் அந்த அடிமை வியாபாரியும் மற்றவர்களும் குழம்பிப் போவார்கள்.

இவ்வாறு கூறி வினோதன் சீட்டி அடித்தான். அப்போது நான்கு நீர் வாழ் உயிரினங்கள் கடலில் நீந்திய வாறே அவர்கள் இருந்த இடத்தை அடைந்தன. அவை ஒருவகை மீன்கள். வினோதன் ஒரு மீனின் மீது சுகுமாரனை ஏற்றி உட்கார வைத்தான் பிறகு அவன் வேறு ஒரு மீனின் மீது அமர்ந்து கொண்டான். அந்த இரண்டு மீன்களும் அடிமை வியாபாரியின் கப்பலை நோக்கி வேக



மாய்ச் சென்றன. அவற்றின் மெய்க் காவலர்கள் போல மற்ற இரு மீன்களும் இருபக்கங்களிலும் சென்றன.

சுகுமாரன் வினோதனிடம் "நீங்கள் எப்படித்தான் எல்லா உயிரினங்களையும் உங்கள் சொற்படி நடக்க வைக்கிறீர்களோ?" என்று கேட்டான். வினோதனும் "அதெல்லாம் நாம் அவற்றோடு பழகும் விதத்தில் இருக்கிறது" என்றான்.

அப்போது சுகுமாரன் "அப்படியானால் நீங்கள் மனிதர்களையும் உங்கள் சொற்படி நடக்க வைக்கலாமே" என்றான். வினோதனும் "அது சற்றுக் கடினமான வேலையே. மற்ற உயிரினங்கள் ஐந்தறிவு படைத்தவை. மனிதனோ ஆறறிவு படைத்தவன். அவனது இயல்பு



குள் சண்டை போட்டுக் கொண்டு பகைமை கொள்வதைப் பார்க்கிறோம். இந்த இயல்பு மாறவேண்டும். இது நீங்கள் கூறுவதுபோல அன்பினால்தான் முடியும்'' என்றான்.

அவர்கள் கப்பலை அணுகிய போது எங்கும் இருள் சூழ்ந்திருந்தது. அவர்கள் மீன்களுக்கு நன்றி கூறிவிட்டுக் கப்பலில் ஏறினார்கள். ஓரிடத்தில் நின்று சாளரம் வழியாகப் பார்த்தார்கள். அதுதான் அச்சிறுவர்கள் அடைபட்டிருந்த அறை. அவர்கள் நினைவிழந்து படுத்திருப்பதை அவர்கள் கண்டார்கள். அந்த அறைக்கதவைப் பார்த்தபோது அது பூட்டப்பட்டிருப்பது அவர்களுக்குத் தெரிய வந்தது.

அப்போது வினோதன் சுகுமாரனிடம் ''நாம் தேடி வந்த சிறுவர்கள் பத்திரமாக இருக்கிறார்கள். ஆனால் இங்கு அடைக்கப்பட்டிருப்பதால் இவர்களை விடுவிக்க ஏதாவது செய்தாக வேண்டும். இவர்களை அழைத்து வந்தவன் என்ன செய்யப் போகிறான் என்பதை கவனிப்போம்'' என்றான். அங்கிருந்து அடுத்த அறையின் சாளரத்திற்குப் போய் உள்ளே என்ன நடக்கிறது என்று பார்த்தார்கள். அங்கு அடிமை வியாபாரி தன் ஆட்களுடன் சேர்ந்து உட்கார்ந்து ஆலோசனை நடத்திக் கொண்டிருந்தான். அந்த அறையில் கத்திகளும் வாள்களும் தடிகளும் இன்னும்

அவன் மனம் நினைப்பதற்கு ஏற்ப அமைகிறது. அவன் மனம் கட்டுக்கடங்காத குதிரை போலத் திரிந்து ஏதோதோ எண்ணமிடுகிறது. சந்தேகங்களைக் கிளப்புகிறது. கேள்வி மேல் கேள்வியாகக் கேட்கச் சொல்கிறது. இப்படிப்பட்டவர்களை வசப்படுத்துவது கடினமே. மற்ற உயிரினங்கள் அப்படியல்ல'' என்றான்.

சுகுமாரனும் ''ஆம். நம் வீட்டிலேயே வளரும் நாய் பூனைகள் நம் சொற்படிக் கேட்டு நடப்பதைக் காண்கிறோம். ஆனால் அதே வீட்டில் ஒன்றாக வளரும் சகோதரர்களும் சகோதரிகளும் அப்படி இருப்பதில்லை. ஒருவர் பேச்சை மற்றவர் கேளாமலும் அனாவசியமாக அற்ப விஷயங்களுக்கு எல்லாம் தமக்

பலவித ஆயுதங்களும் வைக்கப் பட்டிருந்தன. அவர்களது பேச்சிலிருந்து அவர்கள் கடல் கொள்ளையும் அடிப்பவர்கள் என்றும் அந்த அடிமை வியாபாரி அவர்களது தலைவன் என்பது தெரிந்தது.

அவர்களது தலைவன் "நல்ல வேளை. இச்சிறுவர்களைத் தேடிக் கொண்டு யாரும் இங்கு வரமாட்டார்கள். இவர்களை ரகசியமாக விற்றுவிடலாம்" என்றான். அப்போது துணைத்தலைவன் போலத் தென்பட்ட ஒருவன் "சரி. அவர்களைப் போய்ப் பார்த்து என்ன விலைக்கு விற்கலாம் என்று ஒரு மதிப்புப் போடலாம்" என்றான்.

அப்போது தலைவன் ஒரு ஆளைக் கூப்பிட்டு "நீ அடுத்த அறையின் கதவைத் திறந்து வை. சற்று நேரத்தில் அங்கு நாங்கள் வருகிறோம்" என்றான். அந்த ஆளும் சிறுவர்கள் அடைத்து வைக்கப்பட்டிருந்த அறைக் கதவைத் திறந்து வைத்து விட்டுப் போனான்.

அப்போது விநோதன் சுகுமாரனிடம் "இதுதான் சரியான சமயம். நீ போய் அந்தச் சிறுவர்களிடையே படுத்துக் கண்ணை மூடிக்கொண்டிரு" என இரகசியமாகக் கூறினான். சுகுமாரனும் மெதுவாக அந்த அறைக்குள் போய் சிறுவர்களின் மத்தியில் படுத்துக்கொண்டான்.

சற்று நேரம் கழித்து தலைவனும் துணைத் தலைவனும் அந்த அறைக்



குள் வந்தார்கள். துணைத்தலைவன் தலைவனிடம் "வழக்கம்போல இவர்களை முத்துத் தீவில் கொண்டு போய்தானே விற்கப் போகிறோம்?" என்று கேட்டான்.

தலைவனும் "இல்லை. இம்முறை மாணிக்கத் தீவில் கொண்டுபோய் விற்கப் போகிறோம். ஏனெனில் அங்கு ஒரு அடிமைக்கு ஆயிரம் வராகன்கள் கிடைக்கும். இந்த ஐந்து சிறுவர்களையும் விற்றால் ஐயாயிரம் வராகன்கள் கிடைக்கும்' என்றான். துணைத்தலைவனோ அச்சிறுவர்களைப் பார்த்துவிட்டு "ஐந்தா? ஆறு பேர்களல்லவா இருக்கிறார்கள்" என்றான்.

தலைவனோ "என்ன உளறுகிறாய்? நான் அழைத்து வந்தது ஐந்து பேர்



முட்டாள்? நானு பைத்தியக்கா ரன்? உன்னை இப்படியே விட்டு வைக்கக்கூடாது'' என்று கூறித் தன் இடைவாளை எடுத்தான்.

துணைத்தலைவனே ''கத்தியைக் காட்டி மிரட்டினால் மட்டும் நீ அறிவாளியாகி விடுவாயோ. நான் ஆயிரம் தடவை சொல்கிறேன். நீ முட்டாள். முட்டாள். முட்டாள்'' என்றான். தலைவனுக்கு கோபம் வந்து துணைத்தலைவனைத் தாக்கவே அவனும் திரும்பித் தாக்கினான். இதனால் இருவரிடையே பயங்கர சண்டை ஏற்பட்டது. கப்பலில் உள்ளவர்களெல்லாம் ஒரு பக்கமாகக் கூடி நின்று அந்தச் சண்டையைப் பார்க்கலானார்கள்.

தலைவனும் துணைத்தலைவனும் கடுமையாகச் சண்டை போட்டுக் கொள்வது கண்டு அவர்கள் திகைத்துப் போனாரகள். அதன் முடிவு எப்படி இருக்குமோ, தங்கள் நிலை என்ன ஆகுமோ எனப் பயந்தார்கள். அவர்களில் யாரும், இருவருக்கும் உதவச் செல்லவில்லை. அப்படி உதவப் போனால் அது தம் எதிர்காலத்தை பாதிக்கும் என்று எண்ணிப் பேசாமல் இருந்தனர்.

சண்டையின் முடிவில் துணைத் தலைவன் தலைவனைக் கொன்றான். அதைக் கண்டு அங்கு கூடி நின்றவர்கள் மலைத்துப் போனார்கள். அப்போது துணைத்தலைவன் ''ஒழிந்தான் முட்டாள்! தான் பிடித்த முயலுக்கு

களையே. எப்படி ஆறாகும்? ஒருவன் ஆகாயத்திலிருந்து குதித்து வந்தானா?'' என்று கேட்டான். அப்போது துணைத்தலைவன் ''உனக்குப் பார்வை மங்கிவிட்டதா? நன்றாகப் பார் ஆறு பேர்கள் இருக்கிறார்கள்'' என்றான் உரத்த குரலில். தலைவனே ''நான் ஒன்றும் பார்க்கத் தேவை இல்லை. நான் அழைத்து வந்தது ஐந்து பேர்களையே அதனால் ஐவர் தான் இருப்பார்கள்'' என்றான்.

துணைத்தலைவனே ''இப்படிப் பைத்தியக்காரத்தனமாக உளராதே. சரியாக எண்ணிப் பார்க்கக்கூடத் தெரியாத நீ எல்லாம் ஒரு தலைவனா? அடிமுட்டாளாக இருக்கிறாயே'' என்று உறுமினான். தலைவனே ''என்ன சொன்னாய்? நானா

மூன்றே கால் என்று முட்டாள்தன மாகக் கூறும் இவன் தலைவனாக இருப்பதைவிட ஒழிந்து போனதே மேல். இவனது உடலைத் தூக்கிக் கடலில் எறியுங்கள்'' என்றான்.

அப்போது துணைத்தலைவனை மகிழ்விக்க கூட்டத்திலிருந்த ஒருவன் முன் வந்து ''ஆமாம் இவன் இதற்குமுன் தன் தலைவனை நயவஞ்சகமாகக் கொன்றே தலைவன் ஆனான். அந்த துரோகத்திற்குத் தக்க தண்டனையே கிடைத்தது'' என்றான். அது கேட்டுத் துணைத்தலைவன் ''சபாஷ்! இந்த துரோகியின் உடலை இப்போதே தூக்கிக் கடலில் போடு. இனி நானே உங்கள் தலைவன்'' என்றான். அவனது கட்டளை உடனே நிறைவேற்றப்பட்டது.

கப்பலில் கூச்சலும் சண்டையுமாக இருந்தது கண்டு அச்சிறுவர்கள் விழித்து எழுந்து சாளரம் வழியாக என்ன நடக்கிறது என்று பார்க்கலானார்கள். அப்போது சுகுமாரன் சட்டென அறையில் எரிந்து கொண்டிருந்த விளக்கை அணைத்து விட்டு அவர்களிடம் மெல்லிய குரலில் ''அவர்கள் எல்லாம் கடற் கொள்ளைக்காரர்கள். உங்களை எல்லாம் தொலைதூரத்திலுள்ள ஒரு தீவிற்குக் கொண்டு போய் அடிமைகளாக விற்கத் திட்டம் போட்டிருக்கிறார்கள். நான் சொல்கிறபடி நீங்கள் செய்தால் இந்த ஆபத்திலிருந்து தப்பமுடியும். நீங்கள் இங்கு நடந்ததை எதுவுமே அறியாதவர்கள் போல் மறுபடியும் படுத்துத் தூங்குபவர்கள் போலப் பாசாங்கு செய்யுங்கள். நானும் உங்களோடு படுத்துக் கொள்கிறேன். அவர்களது திட்டம் நமக்குத் தெரிந்துவிட்டது என்பதை அவர்கள் அறிந்தால் நமக்கு மேலும் ஆபத்தே'' என்றான்.

அச்சிறுவர்கள் அதைக் கேட்டுத் திகைத்துப் போனார்கள். சுகுமாரன் கூறியபடியே கண்களை மூடிக் கொண்டு அவர்கள் படுத்துக் கொண்டார்கள்.

(தொடரும்)





# முனேகரியின் மனவிருப்பம்

**த**ன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! இந்தப் பயங்கர ராத்திரி வேளையில் நீ ஏன்தான் இப்படிச் சிரமப்படுகிறாயோ! நல்லவிதமாக நடப்பது கூடச் சில சமயங்களில் ஆபத்தாக முடியலாம். இதை விளக்க இந்திரசேனன் என்ற மன்னனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று சொல்லிக் கதையை ஆரம்பித்தது.

மந்தார நாட்டை இந்திரசேனன் என்பவன் ஆண்டு வந்தான். அவனது ஆட்சியில் மக்கள் சுகமாக வாழ்ந்தனர். அவனுக்கு வேறு நாடுகளைத் தன் வசப்படுத்திக்கொள்ள

வேதாளம் சொல்லும் கதை



தானம் செய்து கொள்ள விரும்ப வில்லை'' என்று அத்தூதனிடம் கூறி அனுப்பி விட்டான்.

சில ஆண்டுகள் கழிந்தன. வீர சிம்மன் இறக்கவே அவனது மகன் குமாரசேனன் மகரந்த நாட்டின் மன்னனுனன். அவன் சமாதானத்தை விரும்புபவன். தன் தந்தை உயி ருடன் இருந்தபோது இந்திரசிம் மன் பகைமையை விட்டு சமாதான மாகப் போகச் செய்த முயற்சி பற்றி அவன் அறிந்திருந்தான். அவன் இரு நாடுகளுக்கிடையே பகைமை போகவும் நிரந்திர சமா தானம் நிலவவும் இந்திரசேனனின் மகள் மனேகரியை மணப்பது எனத் தீர்மானித்தான்.

குமாரசேனன் தன் விருப்பத்தை ஒரு கடிதத்தில் எழுதி அதனை ஒரு தூதன் வாயிலாக இந்திரசேன னுக்கு அனுப்பினன். அதைப் படித்த இந்திரசேனன் மிகவும் மகிழ்ச்சியை அடைந்தான். பகைமையை ஒழித்து சமாதானத்தை நாடும் குமார சேனன் உயரிய பண்புடையவன் எனக் கண்டு அவனே தன் மகள் மனேகரியை மணக்கத் தக்கவன் என எண்ணி அந்த விவாகத்திற்கு இணங்குவது என்று தீர்மானித் தான்.

ஆனல் இந்திரசேனனின் மக னை தீரசேனனுக்குத் தன் தந்தை செய்த முடிவு பிடிக்கவில்லை. நீண்ட நாள் பகையாளியை சம்மந்

வேண்டும் என்ற ஆசை இல்லை. அவன் எல்லோருடனும் சமாதான மாகப் போகவே விரும்பினன்.

மந்தார நாட்டை அடுத்து மகரந்த நாடு இருந்தது. அதன் மன்னன் வீரசேனன். இந்த இரு காடுகளுக் கிடையே பரம்பரை பரம்பரையாக பகைமை இருந்து வந்தது. அதனை ஒழிக்க தீர்மானித்து இந்திரசேனன் ஒரு சமாதான தூதனை வீரசிம்ம னிடம் அனுப்பினன். ஆனல் வீர சிம்மனே நம் இருநாடுகளும் நீண்ட காலப் பகைமையை மறந்துவிட முடியாது. நம் முன்னேர்களும் அவ் வாறு இருக்கவில்லை. அதனல் நானும் அவர்களைப் போல, இருந்து மந்தார நாட்டைப் பகை நாடகவே நினைப்பேன். நான் சமா

தியாக்கிக் கொள்வது தன் வம்ச கௌரவத்தைக் குலைப்பதாகும் என அவன் எண்ணினான். ஆனால் தான் நினைத்ததை அவன் தன் தந்தையிடம் கூறவில்லை.

தீரசேனனோடு நெருங்கிப் பழகும் அரச குடும்பத்தைச் சேர்ந்த சிலர் அவன் தன் தந்தையின் எண்ணத்திற்கு நேர் எதிராக நினைப்பது கண்டு அவனது அபிப்பிராயமே சரி என்று கூறி அவனை முடுக்கி விட்டார்கள். மனோகரியை குமாரசேனன் மணக்க முன்வந்தது அவன் மந்தார நாட்டைத் தன் நாட்டோடு சேர்த்துக் கொள்ளப் போடும் சதித் திட்டம் என அவர்கள் தீரசேனனிடம் கூறினார்கள். அதனை முறியடிக்க இப்போதே இந்திரசேனனை சிறையில் அடைத்துவிட்டு தீரசேனனே அந்நாட்டின் மன்னனாகிவிட வேண்டும் என்று கூறினார்கள்.

அதற்கான திட்டத்தையும் அவர்கள் வகுத்துக் கொடுத்தார்கள். அதன்படி தீரசேனன் ஒருநாளிரவு தன் தந்தை இந்திரசேனனைப் பிடித்து சிறையில் அடைத்துவிட்டு தானே மன்னன் எனப் பிரகடனப்படுத்தினான். சிறைப்பட்ட இந்திரசேனனுக்குத் தன் மகனின் இச் செயல் பிறர் தூண்டிவிட்டுச் செய்யப்பட்டது என்பது விளங்கிவிட்டது. அவன் தன் துக்கத்தை அடக்கிக் கொண்டு சிறையில் கிடந்தான்.

தீரசிம்மன் சிம்மாசனத்தில்



அமர்ந்ததுமே குமாரசேனனுக்கு "என் தங்கையை மணப்பதன் மூலம் என் நாட்டையே அபகரித்துக் கொள்ள, நீ சதித் திட்டம் தீட்டினாய். நம் இரு நாடுகளுக்கிடையே நீண்டகாலப் பகைமை நிலவும் போது உன் திட்டம் நிறைவேற விடுவேனா? உன்னைத் தக்க விதத்தில் தண்டிக்கப் போகிறேன்" என ஒரு லிகிதம் எழுதி அனுப்பினான்.

அக்கடிதத்தைப் படித்த குமாரசேனனின் மனம் மிகவும் வருந்தியது. தான் மந்தார நாட்டுடன் சமாதானமாகப் போக விரும்பியும் அது முடியவில்லையே என எண்ணி அவன் மிகவும் வருத்தப்பட்டான். தீரசிம்மன் போரை ஆரம்பிப்பான் என்றும் அப்போது அவனை அதில்

தோற்கடித்து இந்திரசேனனைச் சிறையிலிருந்து மீட்டு மீண்டும் அவனை மந்தாரபுரி நாட்டின் மன்னனாக்குவது என்றும் குமாரசேனன் தீர்மானித்து விட்டான்.

இதற்குள் மந்தார நாட்டு மக்களிடையே பெருத்த கொந்தளிப்பு ஏற்பட்டது. இந்திரசேனனை விடுவிக்கக் கோரியும் தீரசேனனுக்கு எதிராகவும் ஆர்ப்பாட்டங்கள் மக்களால் நடத்தப்பட்டன. இந்தப் புரட்சிக்கு சிம்மநாதன் என்பவன் தலைமை தாங்கினான். அவன் நாடெங்கிலும் சென்று மக்களைத் தூண்டி வீரசேனன் பதவியை விட்டு விலகி இந்திரசேனனை மீண்டும் மன்னனாக்க வேண்டும் என்ற இயக்கத்தைத் தொடர்ந்து நடத்தினான். அது வலுத்தது. இதைக் கண்ட தீரசேனன் முதலில் உள்நாட்டுக் கலகத்தை அடக்கி சிம்மநாதனைப் பிடித்துச் சிறையில் அடைத்து விட்டுப் பிறகு குமாரசேனனோடு போர் புரிவது என்று தீர்மானித்தான். ஆனால் சிம்மநாதனைப் பிடிக்க முடியவில்லை.

மந்தார நாட்டில் உள்நாட்டுக் கலகம் நடக்கிறது என அறிந்த குமாரசேனன் தீரசேனனோடு போர் புரிய அதுவே சரியான சமயம் என எண்ணிப் படை எடுத்து வந்தான். தீரசேனனின் நிலை இருதலைக் கொள்ளி எறும்பு போலாயிற்று இந்திரசேனனைச் சிறைப்படுத்தச் சதித்திட்டம் போட்ட தீரசேனனின் உறவினர்கள் தீரசேனனைக் கை விட்டுவிட்டு தம்மில் ஒருவன் அரசனாவது எனச் சதியாலோசனை செய்தார்கள். இதை அறிந்த தீர



சேனன் அந்த சதிகாரர்களைப் பிடித்துச் சிறையில் அடைத்தான்.

அடுத்து தீரசேனன் குமாரசேனனின் படைஎடுப்பை எதிர்க்க வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டான். அவன் தன் படைகளுக்குத் தலைமை தாங்கி குமாரசேனனை எதிர்த்தான். ஆனால் தீரசேனனின் படை வீரர்களில் பலர் இந்திரசேனனின்பால் விசுவாசம் உடையவர்கள். அதனால் போர்புரியாமல் குமாரசேனனிடம் சரண் அடைந்தார்கள். குமாரசேனன் இதனால் தீரசேனனை மிக எளிதில் தோற்கடித்து விட்டான்.

குமாரசேனன் தீரசேனனை கைது செய்து சிறையில் தள்ளினான். சிறையில் அடைபட்டிருந்த இந்திரசேனனை விடுதலை செய்தான். இந்திரசேனன் குமாரசேனனைக் கட்டித் தழுவிக் கொண்டு "நீ செய்த இந்த மகத்தான உதவிக்கு நான் எப்படிக் கைம்மாறு செய்வது என்றே திகைத்துக் கொண்டிருக்கிறேன்" என்றான்.

குமாரசேனனும் "நம் பகைமை ஒழிய நான் தங்கள் மகளை மணப்பது என எண்ணி இருந்தேன். எனவே தாங்கள் என்னைத் தங்கள் மாப்பிள்ளையாக ஏற்றுக் கொள்ளுங்கள்" எனக் கூறினான்.

இந்திரசேனனும் "இது மிகவும் நல்ல ஏற்பாடே. எனக்கு இது முழுச் சம்மதமே. ஆயினும் என் மகளின் விருப்பத்தையும் தெரிந்து கொண்டு வருகிறேன். அவள் இதற்கு எந்த ஆட்சேபணையும் கூற மாட்டாள் என்றே நினைக்கிறேன்" என்றான். இந்திரசேனனும் உடனே





அந்தப்புரத்திற்குப் போய்த் தன் மகள் மனோகரியைக் கண்டு குமார சேனனின் விருப்பத்தை அவளிடம் கூறினான். மனோகரியும் சிறிது நேரம் யோசித்துவிட்டு "தந்தையே! என் மனதில் பட்டதை மறைக்காமல் கூறிவிடுகிறேன். மக்களிடையே உங்கள் பால் விசுவாசம் செலுத்தக் கோரி புரட்சி செய்து தன் உயிருக்கும் அஞ்சாமல் முயன்ற வீரசிங்கமான அந்த சிம்மநாதனையே நான் மணக்க விரும்புகிறேன். ஆனால் இதனைக் குமாரசேனன் அறிந்தால் தங்களுக்கு என்ன கெடுதல் செய்வானோ என்றுதான் பயப்படுகிறேன்" என்றாள்.

இந்திரசேனன் சற்று யோசித்துவிட்டு "நீ இப்படி பயப்படவேண்டாம். நீ விரும்பியபடி உன்னை சிம்மநாதனுக்கே விவாகம் செய்து வைக்கிறேன்" எனக் கூறிவிட்டு குமாரசேனனைக் காணச் சென்றான். அவன் தன் மகளின் விருப்பம் என்ன என்பதை குமாரசேனனிடம் தெரிவித்தான். குமாரசேனன் மனோகரி எதிர்பார்த்தபடி இந்திரசேனன் மீது கோபம் கொள்ளவில்லை. அவனே முன்நின்று சிம்மநாதனுக்கும் மனோகரிக்கும் விவாகத்தை நடக்கச் செய்தான். அதன் பிறகு அவன் இந்திரசேனனிடம் தான் வென்ற நாட்டை ஒப்படைத்துவிட்டு அவனிடம் விடை பெற்றுக்கொண்டு தன் நாட்டை அடைந்தான்.

வேதாளம் இக் கதையை கூறி "மன்னா! குமாரசேனன் போரில் வெற்றி பெற்றும் மந்தாரநாட்டைத் தன் நாட்டோடு இணைத்துக் கொள்ளவில்லை. தான் முதலில் எண்ணியபடி மனோகரியை மணக்கவும் இல்லை. அவன் மந்தார நாட்டை இந்திரசேனனிடம் ஒப்படைத்துவிட்டுத் தன் நாட்டிற்குச் சென்றது சரியா? இந்திரசேனன் புரட்சித் தலைவனை சிம்மநாதனைத் தன் மாப்பிள்ளையாக்கிக் கொண்டது சரியா? இந்தக் கேள்விகளுக்குச் சரியான விடைகளைத் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்" என்றது.

அதற்கு விக்கிரமனும் "இந்திர சேனனும் குமாரசேனனும் அரசியலில் கைதேர்ந்தவர்கள் என்பதில் சந்தேகமே இல்லை. இருவரது முதலாவது நோக்கம் இருநாடுகளுக்கிடையே இருந்து வந்த நெடுங் காலப் பகைமையை ஒழிப்பதுதான். குமாரசேனன் இந்தப் பகைமை மறந்து போவதற்கு தான் மனோகரியை மணப்பது ஒருவழி என நினைத்தானே ஒழிய அதனையே தன் குறிக்கோளாகக் கொள்ளவில்லை. தீரசேனனைத் தோற்கடித்து இந்திர சேனனை மீண்டும் மந்தார நாட்டின் மன்னனாக்கியதால் குமார சேனன் தான் விரும்பிய லட்சியத்தை அடைந்து விட்டான். மனோகரி சிம்மநாதனையே மணக்க விரும்புகிறாள் என்பதை அறிந்ததும் குமார சேனன் தான் அவளைத் தானே மணக்க வேண்டும் என வற்புறுத்தவில்லை. மனோகரியை அவன் இந் நிலையில் மணந்து கொண்டால் அது அவள் விரும்பாத விவாகம் என்றும் அதனால் அவனது இல்லற வாழ்வு சுகமாக அமையாது என்பதையும் அவன் உணர்ந்தான். அதனால் தான் அவனே முன்நின்று அந்த விவாகத்தை நடத்தி வைத்து விட்டுத் தன் நாட்டிற்குத் திரும்பிச் சென்றான். இந்திரசேனன் சிம்மநாதனை தன் மாப்பிள்ளையாக ஏற்றதற்குக் காரணம் அவன் எந்த ஆபத்தான நிலையிலும் தன் லட்சியத்தை அடையப் போராட்டம் நடத்தி அதற்குத் திறன்படத் தலைமை தாங்கியதே. இப்படிப்பட்ட இயல்பை உடையவன் தன் மகள் மனோகரியை மணக்க ஏற்றவனே எனக் கருதியே இந்திரசேனன் அவனைத் தன் மாப்பிள்ளையாக ஏற்றான்" என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# மறந்தேனு பார்!

நாராயணனுக்கு ஒரே ஞாபக மறதி. எந்தப் பொருளை எங்கே வைத்தான் என்றோ எப்போது எந்த வேலையைச் செய்தான் என்றோ அவனுக்கு நினைவில் இருப்பதே இல்லை. ஆனால் அவனுக்கு எல்லாவற்றையும் நினைவுபடுத்தி பொருள்களைத் தேடி எடுத்து வைப்பது அவனது மனைவி தங்கம்மாள்தான்.

ஒருமுறை உள்ளூர்க் கோவிலில் இராமாயணத் தொடர் சொற்பொழிவு நடந்து கொண்டிருந்தது. அதைக் கேட்க்ப்போய் வந்த நாராயணன் தினமும் தன் செருப்பையோ, அங்கவஸ்திரத்தையோ அல்லது கைத்தடியையோ மறந்து விட்டுவிட்டு வந்து விடுவான். அவன் மனைவி போய்த்தேடி அவற்றை எடுத்து வருவாள்.

ஒருநாள் நாராயணன் இராமாயணப் பிரசங்கம் கேட்டு விட்டு வீட்டிற்குத் திரும்பி வந்து உற்சாகத்துடன் "இதோபார். இன்று எதையும் மறந்து விட்டு வரவில்லை. அங்கவஸ்திரம், கைத்தடி, செருப்பு எல்லாமே பத்திரமாகக் கொண்டுவந்து விட்டேன் பார்" என்றான்.

அவன் மனைவியோ தலையில் அடித்துக்கொண்டு "ஐயோ! நீங்கள் இன்று செருப்பு போட்டுக்கொண்டே போகவில்லையே. யாருடைய செருப்புக்களைப் போட்டுக்கொண்டு வந்து விட்டீர்களே" என்றாள்.



# மகான்கள் கனவு கண்ட பாரத நாடு

## "பாரத சமுதாயம் வாழ்கவே"

நம்நாடு 1947 ஆகஸ்ட் 15ந்தேதி விடுதலை பெற்றது. இதே ஆகஸ்ட் 15ந் தேதியில் ஆனால் 1872ல் மகான் அரவிந்தர் பிறந்தார். அவர் இங்கிலாந்தில் கல்வி கற்று 1893ல் தாய்நாடு திரும்பினர். அன்று முதல் இந்தியாவை அன்னியர் ஆட்சியிலிருந்து விடுதலை பெறச்செய்யப் பாடுபட்டார். புரட்சிகரமனப்பான்மை கொண்ட அவர் இம்முயற்சியில் ஈடுபட்டு 1910ல் பாண்டிச்சேரியை வந்தடைந்தார். பின்னர் ஆன்மீகத்துறையில் ஈடுபட்டு மனித சமுதாயத்தின் உயர்விற்காக திவ்விய சக்தியை இவ்வுலகில் கொணர யோகசாதனையில் இறங்கினர்.

அவர் கூறியதாவது: "பாரதத்தாய் பூவுலகில் ஒரு அம்சம் என்பது மட்டுமல்ல, அவள் ஒரு சக்தி. திவ்வியசக்தி எனவே பாரதநாடு அழியாது. மனித சமுதாயத்தைச் சீர்திருத்தி திவ்விய சக்தியை நம்நாடு அளிக்கப் போகிறது. மனிதர்களைப் பிணைக்கும் எல்லா மதங்களும், விஞ்ஞான சாத்திரங்களும், தத்துவரீதியில் அமைந்து உலகினுக்கு வழிகாட்டியாக விளங்கும் ஒரு கொள்கையை பாரத நாடு உலகில் பரப்பப் போகிறது."

இந்த மகானின் இந்த உயரிய கருத்துக்களை நாமும் ஏற்று நடப்போமாக.

## உங்களுக்குத் தெரியுமா?

1. வட இந்தியாவில் 'தேவதைகளின் பள்ளத்தாக்கு' எனக்குறிப்பிடப்படும் இடம் எது?
2. இன்றைய டில்லி நகரம் பாண்டவர்காலத்தில் இந்திரப்பிரஸ்தம் என அழைக்கப்பட்டது. அதற்குப் பின் இதற்கு ஏழு பெயர்கள் மாறிமாறிக் கொடுக்கப்பட்டன. அவையாவை?
3. ஒரு மகானின் அஸ்தி கடந்த 300 ஆண்டுகளாக ஒரு வெள்ளி கண்ணுடிப் பெட்டியில் பாதுகாக்கப்பட்டு பனிரெண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை பக்தர்கள் தரிசிக்க அது காட்டப்படுகிறது. அது யாருடைய அஸ்தி? எங்கே உள்ளது?
4. நம் நாட்டில் "ரோஜா நிற (பிங்க்) நகரம்" என எந்த ஊரின் பெயர்? அப்பெயர் வரக் காரணம் என்ன?

(விடைகள் 36ம் பக்கத்தில்)

nம் கடவுள்:

# ஸ்ரீ கிருஷ்ணர்

மகா விஷ்ணுவின் அவதாரங்களில் முழுமைபெற்ற அவதாரம் கிருஷ்ணவ தாரம் எனக்கருதப்படுகிறது. தேவகி யின் மைந்தனாய் ஸ்ரீ கிருஷ்ணர் அவ தரித்ததிலிருந்தே பல லீலைகளைப் புரியலானார். குழந்தையாக இருக்கும் போதே பூதனையைக் கொன்றார். காளி யன் என்ற விஷப்பாம்பின் தலைமீது நடனமாடி அதனை அழித்தார். கோவர்த்தனகிரியைக் குடையாய்ப் பிடித்து மக்களைக் காத்தார். கொடிய வனான கம்சனைக் கொன்றும், கோப, கோபியர்களை மகிழ்வித்தும் எல்லோ ருடைய அன்பிற்கும் பாத்திரமானார். துவாரகையைத் தலைநகராகக் கொண்டு மக்களுக்கு எவ்விதக் குறையும் இல் லாது ஆட்சி புரிந்தார்.

நேர்மை தவறாத பாண்டவர்களுக்கு உறுதுணையாகநின்று அவர்கள் வெற்றி பெறச் செய்தார். பாரதப் போரின் ஆரம்பத்தில் அர்ஜுனனுக்கு கீதோ பதேசம் செய்து அவனது கடமையை உணர்த்தினார். இன்றும் பகவத்கீதை மக்களுக்கு வழிகாட்டியாக விளங்கு கிறது.

கிருஷ்ணரின் லீலைகளை விவரித்து பக்தி பாடல்களை எண்ணற்றக் கவி ஞர்கள் இயற்றியுள்ளார்கள். அவற்றை பக்தகோடிகள் பாடிப் பரவசம் அடை கிறார்கள்.

கிருஷ்ண ஜெயந்தி நாடெங்கிலும் கொண்டாடப்படுகிறது.



# அம்புலிமாமா செய்திகள்





## பிகாஸோவின் ஓவியம்

புகழ்பெற்ற ஓவியரான பிகாஸோவிற்கு அவரது ரசிகர் ஒரு கடிதத்தோடு ஒரு காசோலையை இணைத்துத் தமக்கு ஒரு படம் வரைந்து அனுப்புமாறு வேண்டினார். பிகாஸோ அந்தக் காசோலையின் பின்புறத்தில் ஒரு படத்தை வரைந்து அனுப்பினார். அந்தக் காசோலை தற்போது லண்டனில் கடந்த ஜூன் 24ந் தேதி 3,960 பவுன்களுக்கு (சுமார் ஒரு லட்சம் ரூபாய்) ஏலத்தில் எடுக்கப்பட்டது.





## பிறப்பதெல்லாம் பெண்களே

சீனாவில் புஜியானின் தென்கிழக்குப் பகுதியில் கோயாங் என்ற ஊரில் பிறக்கும் குழந்தைகள் எல்லாம் அநேகமாகப் பெண்களே. கடந்த நாற்பது ஆண்டுகளில் இந்த கிராமத்தில் 140 குழந்தைகள் பிறந்தன. அவற்றில் 12 மட்டுமே ஆண்கள். மற்றவை பெண்கள். 1978 முதல் பிறப்பதெல்லாம் பெண் குழந்தைகளே. இத்தகைய பிறப்பிற்கும் அக்கிராமத்துச் சுற்றுப்புறச் சூழலுக்கும் ஏதாவது தொடர்பு இருக்குமோ என வல்லுநர்கள் ஆய்ந்து வருகிறார்கள்.

# இலக்கிய உலகம்

1. பெயர் பெற்ற எழுத்தாளர் முல்க்ராஜ் ஆனந்த் எழுதிய முதலாவது நாவலைப் பிரசுரிக்க இருபது வெளியீட்டகத்தவர் மறுத்தனர். பிறகு அதற்கு ஒரு ஆங்கிலேயர் முன்னுரை எழுதிக் கொடுக்க அது பிரசுரம் ஆயிற்று. அந்த ஆங்கிலேயர் யார்? அந்த நூலின் பெயர் என்ன?
2. நம் நாட்டு இலச்சினையில் 'சத்தியமேவஜெயதே' எனப் பொறிக்கப்பட்ட சொற்கள் எந்த நூலிலிருந்து எடுக்கப்பட்டவை?
3. நாட்டிய சாஸ்திரம் பற்றிய பழமையான நூல் எது?
4. 'தாரிகே-ஹிந்த்'தை எழுதியவர்யார் யார்?
5. ஹிந்தி இலக்கியத்தில் தற்கால நாடகங்களின் முன்னோடியான பாரதேந்து ஹரிச்சந்திரர் எழுதிய இரு புகழ்பெற்ற நாடகங்கள் யாவை?

## விடைகள்

### உங்களுக்குத் தெரியுமா?

1. கூலூ பள்ளதாக்கு இங்கு ஒவ்வொரு கிராமத்திலும் தேவதைகளின் விக்கிரகங்கள் உள்ளன. தசராவின் போது அவற்றைத் தேர்களில் ஊர்வலமாக எடுத்து செல்வார்கள்.
2. லாஸ்கோட், சரி, துக்ள, காபாத், ஜஹாம்பனு, பிரோஜ்பாத், புரானு கிலா, ஷாஜ ஹனுபாத்.
3. செமிண்ட் பாட்மின் சேவியர். கோவாவிலுள்ள கதீட்ரல் ஆப் பான் ஜோசப்.
4. ராஜஸ்தான் மாநிலத் தலைநகர் ஜெயப்பூர். இதை நிறுவிய ராஜா ஜெயசிங் பல மாளிகைகளை ரோஜா நிறக் கற்களைக் கொண்டு கட்டியதால் இப்பெயர் ஏற்பட்டது.

### இலக்கியம்

1. ஈ. எஸ். பார்ஸ்டர். அன்டச்சபில்ஸ் (1930)
2. முண்டக உபநிஷத்.
3. பரதமுனி எழுதிய 'நாட்டிய சாஸ்திரம்'.
4. அல்பெரூனி.
5. சத்யஹரிச்சந்திரா, பாரத துர்தஷா



# முதல் விவசாயி

டார்ட ரஸின் மன்னன் புளுடோ என்ற தேவன். அது பாதாள உலக நாடு. ஒருமுறை புளுடோ பிராஸ் பர்பைன் என்ற தேவதையைக் கண்டு அவளை மணக்கும் எண்ணத்தோடு அவளைக் கவர்ந்து கொண்டு சையானே என்ற ஆற்றைக் கடந்து தன் பாதாள லோகத்தை அடைந்தான்.

பிராஸ்பர்பைனின் தாயாரான செரெஸ் தன் வீடு திரும்பிய போது தன் மகள் அங்கே இல்லாதது கண்டு திடுக்கிட்டாள். தன் மகளை அவள் எங்கு தேடியும் அவள் கிடைக்கவே இல்லை.





அவள் கவலை கொண்டு ஒரு கிழவியாக உருமாறி ஒரு பாறையின் மீது உட்கார்ந்தாள். இப்படியாக ஒன்பது நாட்கள் கழிந்தன. அதன் பிறகு செல்யூஸ் என்ற ஏழையும் அவனது மகளும் அவளைக் கண்டு தம் குடிசைக்கு வரும்படி அவளை அழைத்தார்கள்.



தேவதை செரஸும் அவர்களது இரக்க மனப்பான்மையைக் கண்டு மகிழ்ந்து அவர்களோடு சென்றாள். அந்த ஏழை போகும் வழியில் நீண்ட நாளாக நோய்வாய்ப்பட்டிருக்கும் சிறு வயது மகனைப் பற்றிக் கூறினான். அவனுக்கு எவ்வளவு வைத்தியம் பார்த்தும் அவன் குணமடையவில்லை என்றும் கூறினான்.

கிழவியின் உருவிலேயே இருந்த தேவதை செரஸ் நோயாளியான அந்தச் சிறுவனைக் கண்டு அவனை முத்தமிட்டாள். உடனே அச்சிறுவனின் நோய் மறைந்து அவன் பொலிவுடன் விளங்கினான். அச்சிறுவன் சிரித்து விளையாடியது கண்டு அவனது பெற்றோர்களும் சகோதரியும் மிக்க மகிழ்ச்சி அடைந்தனர்.





இரவில் ஒரு அதிசயத்தை அச்சிறுவனின் தாய் கண்டாள். வீட்டில் எல்லோரும் தூங்கப்படுத்த பிறகு தேவதை செரஸ் எழுந்து அச்சிறுவனைத் தூக்கிக் கொண்டு சில மந்திரங்களைக் கூறினாள். சிறுவனின் தாயார் அக்கிழவி என்ன செய்கிறாள் என்று பார்க்கலானாள்.

தேவதை செரஸ் அச்சிறுவனை ஒரு சாம்பல் குவியலில் போட்டுப் புரட்ட முயன்ற போது அச்சிறுவனின் தாய் அக்கிழவி சிறுவனை என்ன செய்வாளோ எனப் பயந்து பலமாகக் கத்தினாள். அவள் ஓடிப்போய் அச்சிறுவனை சாம்பலிலிருந்து எடுத்துக் கொண்டாள்.



தேவதை செரஸ் அச்சிறுவனின் தாயாரிடம் பதட்டப்படாமல் "நீ மட்டும் கொஞ்சம் பொறுமையோடு இருந்திருந்தால் உன் மகனுக்கு என்றுமே மரணம் வராமல் செய்திருப்பேன். நீ அதைக் கெடுத்துவிட்டாய். ஆனாலும் உன் மகன் வளர்ந்து வீரனாகவும் தயாளகுணம் உள்ளவனாகவும் விளங்குவான். அவன் எல்லோருக்கும் நன்மையே புரிவான்" என்று கூறினாள்.

தேவதை செரஸ் அங்கிருந்து போய் விட்டாள். அவள் தன் மகளைத் தேடி முடிவில் அவளைக் கண்டுபிடித்தாள். ஆனால் அப்போது தன் மகள் புளூடோவை மணந்து டார்டரஸ் நாட்டின் ராணியாகி விட்டதைக் கண்டாள். நிலைமை இவ்வளவு முற்றிப் போன பின் அவள் எதுவும் செய்ய முடியாமல் தன் மனதைத் தேற்றிக் கொண்டாள்.





பல ஆண்டுகள் கழிந்தன. ஏழையின் மகன் டிரிப்டோலமஸ் வளர்ந்து இளைஞனான். தேவதை செரஸ் அவனைக் கண்டு ஏர் உழும் முறையையும் விதை விதைப்பதையும் அவனுக்குக் கற்றுக் கொடுத்து அந்நாட்டின் முதல் விவசாயியாக ஆக்கினாள்.

அத்தேவதை இந்த இளைஞனைத் தன் தேரில் அமர்த்தி உலகின் பல பகுதிகளுக்கு அழைத்தச் சென்றாள். அவன்தான் சென்ற இடங்களில் விவசாய முறையை அங்குள்ள மக்களுக்குக் கற்றுக் கொடுத்தான். டிரிப்டோலமஸ் இவ்வாறு தன் கடமையைச் செவ்வனே செய்தான்.





டிரிப்டோலமஸ் தேவதை செரஸிற்குத் தன் ஊரில் ஒரு பெரிய ஆலயத்தைக் கட்டினான். நாளடைவில் அந்த ஆலயத்தில் பல திருவிழாக்கள் நடந்து வரலாயின. கிரேக்கர்கள் இதனை வெகு நாட்கள் வரை கடைப்பிடித்து வந்தனர்.






வெகு காலத்திற்குமுன் ஒரு காட்டு வழியே அமைந்த பாதை ஓரத்தில் ஒரு யோகி ஆசிரமம் அமைத்து வாழ்ந்து வந்தார். அவர் எப்போது எங்கிருந்து வந்தார் என்பது யாருக்கும் தெரியாது. மக்கள் அவருக்கு அபூர்வ சக்திகள் இருப்பதாகக் கூற லானுர்கள். அதனுல் அவரை தரிசிக்க அங்கு வரலானுர்கள்.

யோகி பார்க்க உயரமாயும் உடல்கட்டு வாய்ந்தவராயும் இருந்தார். அவரது கருத்த நீண்ட தாடி அவருக்கு மேலும் அழகைக் கொடுத்தது. அந்தக்காடு திருடர்கள் பயத்திற்கு பெயர் போனதாக இருந்தாலும் மக்கள் அந்த யோகியை தரிசிக்க வந்து போய்க்கொண்டிருந்ததால் ஜனநடமாட்டம் இருந்து கொண்டே இருந்தது. அப்படி இருந்தும் அக்காட்டில் வழிப்பறி கொள்ளை என்பது தொடர்ந்து இருந்தும் மேலும் அதிகரித்தும் போயிற்று.

இதனுல் மக்கள் அந்த யோகியை தரிசிக்க அங்கு வந்து விட்டு இருட்டுவதற்குமுன் அங்கிருந்து போகலானுர்கள். அதற்கு காரணம் இரவில் கொள்ளைகள், வழிப்பறிகள் நடப்பதேயாகும்.

ஒருமுறை ஒரு பணக்காரர் தன் வண்டியில் மனைவி மக்களுடன் அந்தக் காட்டின் வழியே போய்க் கொண்டிருந்தார். அவர் தம்மோடு ஒரு பெருத்த தொகையை ரொக்கமாக எடுத்துப் போய்க் கொண்டிருந்தார். அவரது மனைவி நிறையத் தங்க நகைகளை அணிந்திருந்தாள். அப்போது நள்ளிரவாகி விட்டது.

திடீரென்று ஒரு உருவம் பாதையின் குறுக்கே நின்று அந்த வண்டியை மறித்தது. பயில்வான் போன்ற உடலும் முறுக்கு மீசையும் தலையில் முண்டாசும் கையில்

-வே. லாவன்யா-



தடியுடனும் வந்த அந்த மனிதனைக் கண்டு வண்டியிலிருந்த பணக்காரர் "ஆ! கொள்ளைக்காரத் தலைவன்!" என்று அலறினன்.

அந்த ஆளும் "ஆம். கொள்ளைக் காரத் தலைவன்தான். அதோ அந் தப் பள்ளத்தைப் பார்த்தீர்களா? அங்கே என் பத்து ஆட்கள் நின்று கொண்டிருக்கிறார்கள். இப்போது மரியாதையாக உங்களிடம் உள்ள பணத்தையும் நகைகளையும் என் னிடம் ஒப்படைத்து விடுங்கள். அப் போது உங்களை ஒன்றும் செய்ய மாட்டேன். எனக்கு உங்களுடைய உயிர் வேண்டாம். உங்களுடைய பணமும் நகைகளும்தான் தேவை. நீங்கள் அவற்றைக் கொடுக்காவிட் டால் நான் என் ஆட்களைக் கூப்பிடு வேன். அவர்கள் உங்களை எப்படி எல்லாம் சித்திரவதை செய்வார் கள் என்று நான் சொல்ல வேண் டுமா?" என்றான்.

வண்டியில் இருந்தவர்கள் கொள்ளைக்காரத் தலைவன் கூறிய தைக் கேட்டார்கள். அவன் காட்டிய இடத்தைப் பார்த்தார்கள். அங்கு பத்துப் பேர்கள் தடிகளுடனும் கத்திகளுடன் நின்று கொண்டிருந் தார்கள். அவர்களைப் பார்க்கவே பயமாக இருந்தது. எனவே அவர் கள் உயிர்த் தப்பினல் போதும் என நினைத்துத் தம்மிடம் இருந்த பணத் தையும் நகைகளையும் எடுத்துக் கொடுத்து விட்டார்கள். கொள்ளைக் காரத் தலைவனும் அவற்றை வாங் கிக் கொண்டு போய்விட்டான். அதன்பின் பணக்காரர் வண்டியை வேகமாக ஓட்டிக் கொண்டு போய் விட்டார்!

இதற்குச் சற்று நேரத்திற்குப்பின் ஒரு வியாபாரி அதே வழியில் நடந்து வந்து கொண்டிருந்தான். அவனையும் கொள்ளைக்காரத் தலை வன் மடக்கி "உம். எடு பணத்தை! அதோபார் என் ஆட்களை" என்று பள்ளத்தைக் காட்டினன். வியா பாரியும் "என்னிடம் அதிகப் பணம் இல்லை. ஐம்பது ரூபாயே உள்ளது" எனக்கூறி அந்தப் பணத்தை எடுத் துக் கொடுத்து விட்டு பள்ளத்தி லுள்ளவர்கள் கேட்கும்படியாக "உங்கள் தலைவரிடம் ஐம்பதா

யிரம் ரூபாய் கொடுத்திருக்கிறேன். பங்கு போட்டுக் கொள்ளுங்கள்" எனக் கத்தினான். கொள்ளைக்காரத் தலைவனும் அவனை நன்கு சோதித்துப் பார்த்து விட்டு அவனிடம் வேறு பணம் எதுவும் இல்லை என்பதை உறுதி செய்து கொண்டு அவனைப் போகவிட்டான்.

அந்த வியாபாரி அந்தக் காட்டை கடந்துபோய் ஒரு சத்திரத்தை அடைந்தான். அங்கு காவல்வீரர்கள் முகாம் செய்திருப்பதைக் கண்டு அவர்களது தலைவனிடம் "நான் காட்டு வழியே வந்தபோது கொள்ளைக்காரத் தலைவன் என்னை வழிமறித்து என் பணத்தைப் பிடுங்கிக் கொண்டான். அவன் எங்கே இருக்கிறான் என்பது எனக்குத் தெரியும். அவனது ஆட்களும் அதிகம் இல்லை. பத்துப் பேர்களே. அவர்களைச் சுற்றி வளைத்துக் கொண்டால் எளிதில் அகப்பட்டு விடுவார்கள். அதனால் நாம் இப்போது விரைந்து சென்றால் அவனைப் பிடித்து விடலாம்" என்றான்.

காவல் படைத்தலைவனும் தன்னுடன் சில காவல்வீரர்களை அழைத்துக் கொண்டு அந்த வியாபாரியுடன் அந்தக் காட்டிற்குள் சென்றான். வீரர்களைத் தம் பின்னால் மறைந்தவாறு வரச் சொல்லிவிட்டு அந்தக் காவலதிகாரி அந்த வியாபாரியுடன் பாதையில் நடந்து சென்றான்.

கொஞ்சதூரம் போனதும் கொள்ளைக்காரத் தலைவன் அவர்களை வழி




மடக்கி "உம். மரியாதையாக உங்களிடமுள்ள பணத்தை எல்லாம் எடுங்கள். இல்லாவிட்டால் அதோ நிற்கும் என் ஆட்களைக் கூப்பிடுவேன்" என்று எதிரே இருந்த பள்ளத்தைச் சுட்டிக்காட்டினான். இருட்டில் அங்கு பத்துப் பேர்கள் கையில் தடிகளுடன் நின்று கொண்டிருப்பது அவர்களுக்குத் தெரிந்தது.

காவலதிகாரி மிகவும் துணிச்சல் கொண்டவன். அவன் கொள்ளைக்காரத் தலைவனையும் அவன் காட்டிய இடத்தில் இருந்த ஆட்களையும் மாறி மாறிப் பார்த்தான். அவன் மனம் அவர்களைப் பிடித்து விடலாம் என்றே கூறியது.

காவலதிகாரி சட்டெனப் பாய்ந்து கொள்ளைக்காரத் தலை

வனைப் பிடித்துக் கொண்டு குரல் கொடுக்க அவனது ஆட்கள் ஓடி வந்து அக்கொள்ளைக்காரத் தலைவனைக் கட்டிப் போட்டார்கள். காவலதிகாரி "உம் போய் அந்த ஆட்களையும் பிடித்து வாருங்கள்" என்று கட்டளை இட்டான். வீரர்கள் அந்தப் பள்ளத்திற்குப்போய் அந்த ஆட்களைத் தாக்கினார்கள். ஆனால் அவர்கள் திருப்பித் தாக்கவில்லை. ஓடவில்லை. நகரக்கூட இல்லை. வீரர்கள் அவர்களைப் பிடித்துப் பார்த்தால் அவர்கள் உயிருள்ள மனிதர்கள் அல்ல என்றும் வைக்கோல் பொம்மைகள் என்றும் கண்டார்கள்.

காவலதிகாரியிடம் அவர்கள் விஷயத்தைத் தெரிவிக்கவே அவனும் "சரி இவனை எல்லாம் இழுத்து வாருங்கள். இங்கே அருகில்தான் யோகியின் ஆசிரமம் இருக்கிறது. அவர் நீண்ட காலமாக இங்கு வாழ்ந்து வருபவர். இவனைப் பற்றி அவர் கூறலாம். எனவே அவரிடம் விசாரிக்கலாம்" என்றான். அதன் பிறகு எல்லோரும் யோகியின் ஆசிரமத்தை அடைந்தார்கள். எங்கு தேடியும் அவர் தென்படவில்லை ஆனால் ஆசிரமத்திலிருந்து நகைகள், பணம் என்று மறைவிடங்களிலிருந்து வெளிக்கொணரப்பட்டன. ஓரிடத்தில் கருத்த நீண்ட தாடி மட்டும் தொங்கியதை அவர்கள் கண்டார்கள்.

அப்போது கொள்ளைக்காரத் தலைவன் பலமாகச் சிரித்து "நீங்கள் வீணாக யோகியைத் தேட வேண்டாம் இந்த தாடியை நான் ஒட்ட வைத்துக் கொண்டால் பகலில் யோகி. இதை இரவில் எடுத்து விட்டால் கொள்ளைக்காரன். நான் வைக்கோல் பொம்மைகளைச் செய்து அவற்றை இருட்டில் பள்ளத்தில் வைத்து என் ஆட்கள் எனக் கூறி இங்கு வரும் வழிப் போக்கர்களை பயமுறுத்தினேன்" என்றான். அதைக் கேட்டு யாவரும் திகைத்து நின்றனர்!






எங்கிருந்தோ ஒரு வானரம் வந்து தன் மலர்ப்பூங்காக்களையும் நந்த வனங்களையும் அழித்து மரம் செடி களை வேருடன் பிடுங்கிப் போடுவதைக் கேட்ட இராவணன் கடும் கோபம் கொண்டான். உடனே ராட்சஸ வீரர்களிடம் அந்தக் குரங்கைப் பிடித்துவரும்படிக் கட்டளை இட்டான்.

ராட்சஸ வீரர்களும் பல ஆயுதங்களை எடுத்துக் கொண்டு அனுமாரைத் தாக்கக் கிளம்பினுர்கள். அவர்கள் அனுமாரை அசோகவனத்தின் தலைவாசலில் கண்டார்கள். அவர்கள் அனுமாரைச் சூழவே அவர் தன் வாலால் தரையில் ஓங்கி அடித்தார். அந்த ஒலி இடியோசை போல இலங்கையையே அதிர வைத்தது.

அனுமார் தன் சிவந்த கண்களை உருட்டிப்பார்த்து "இராமர் வாழ்க! இலட்சுமணன் வாழ்க! சுக்கிரீவ மன்னன் வாழ்க! கோசல நாட்டு அதிபதியான இராமரின் தூதன் நான். வாயு தேவனின் புதல்வன். என் பெயர் அனுமான். ஆயிரம் இராவணன்கள் என்னை எதிர்த்த போதிலும் தனியாக நான் ஒருவனே நின்று போரிட்டு வெற்றி பெற முடியும். நீங்களெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கும் போதே இந்த இலங்கையை அழித்துவிட்டு இராமரிடம் போய்ச் சீதையைக் கண்டதாகக் கூறப் போகிறேன்" என உரக்கக் கூறினுர்.

அதைக் கேட்டு அவர்கள் பயந்



தாலும் இராவணன் கட்டளைப்படி நடந்தாக வேண்டுமே என நினைத்து அனுமாரைத் தாக்கலானார்கள். அனுமார் அந்த வாசலருகே கிடந்த தூணை எடுத்து கொண்டு அந்த ராட்சஸர்களை அடித்துக் கொன்று விட்டு மறுபடியும் அந்த வாசலின் முன் நின்றார். உயிர் தப்பி ஓடிய சில ராட்சஸர்கள் இராவணனிடம் போய்ப் பல ராட்சஸ வீரர்கள் இறந்து போனதைக் கூறினார்கள்.

அது கேட்டு இராவணன் கோபம் கொண்டு மிகப்பலசாலி எனக் கருதப்பட்ட ஜம்புமாலியை அனுப்பி அனுமாரைப் பிடித்து வரச் சொன்னான். ஜம்புமாலி பிரஹஸ்தன் என்ற படைத்தலைவனின் மகன். அவன் வீரர்கள் புடைச் சூழச் சென்றான்.

இதற்குள் அனுமார் சைத்திய வனம் என்ற பூங்காவை அழித்து விட்டு தன்னைத் தாக்க வந்த காவலாளிகளை எல்லாம் அடித்துக் கொன்றார். இந்த சமயத்தில்தான் ஜம்புமாலி தன் தேரில் அமர்ந்து ராட்சஸ வீரர்களுடன் அனுமார் இருக்கும் இடத்தை அடைந்தான்.

அனுமார் தலைவாசலின் சட்டத்தின் மீது உட்கார்ந்திருந்தார். அவரை ராட்சஸ வீரர்கள் தாக்கலானார்கள். அவர்களது அம்புகள் அனுமாரைத் தாக்கி இலேசாகக் காயப்படுத்தின. இதனால் அவரது உடல் சிவந்து போயிற்று. அவர் அங்கே கிடந்த ஒரு கல்லைத்தூக்கி ஜம்புமாலி மீது எறிந்தார். ஆனால் ஜம்புமாலி தன் அம்பினால் அதைத் தடுத்து கீழே விழச் செய்தான். அனுமார் மரங்களைப் பிடுங்கி அவன் மீது எறியலானார். அவன் அவற்றை எல்லாம் தன் அம்புகளால் தடுத்ததோடு அனுமார் மீதும் சில அம்புகளை எய்தான். அனுமார் ஒரு சிறு இரும்புத்தூணை எடுத்துச் சுழற்றி ஜம்பு மாலியின் மீது பலமாக எறிந்தார். அது ஜம்புமாலியைக் கொன்றதோடு அவனது தேரையும் சுக்கு நூறாக்கியது.

ஜம்புமாலி இறந்த செய்தி இராவணனுக்குக் கிடைக்கவே "ஓ! மாவீரன் ஜம்புமாலியா இறந்தான்? ஒரு குரங்கிற்கு அவ்வளவு பலமா? அதனைப் பார்க்க வேண்டும். அத

னல் ஏழு பலசாலிகளை அனுப்பு கிறேன்'' என எண்ணினன். அவன் தன் மந்திரிகளின் புதல்வர்களான ஏழு பேர்களை அனுப்பி அனுமாரைப் பிடித்து வரச் சொன்னன். அவர் கள் மிகுந்த பலசாலிகள். அவர்கள் ஒவ்வொருவரும் தாம் அனுமாரைக் கட்டிப்பிடித்து வருவதாகப் போட்டி போட்டுக் கொண்டு கூறிவிட்டுக் கிளம்பிச் சென்றார்கள்.

அவர்கள் அசோகவன வாசலை அடைந்ததுமே அனுமார் மீது சர மாரியாக அம்புகளை எய்தார்கள். அனுமார் அந்த அம்புகள் தன் மீது படாதபடி ஆகாயத்தில் தாவித்தா விக் குதித்தார். அவர் பலமாகக் கர்ஜித்து தனக்குக் கிடைத்த ராட் சஸர்களை ஒருவர் மீது ஒருவரைப் புலமாக அடித்துத் தூக்கி எறிந் தார். இப்படியாகப் பல ராட்சஸர் கள் இறந்து போனர்கள். அதேகதி தான் அந்த ஏழு மந்திரி குமாரர் களுக்கும் ஏற்பட்டது.

மந்திரி குமாரர்களும் அனுமா ரால் கொல்லப்பட்டார்கள் என்று கேட்டதும் இராவணன் உண்மை யிலேயே சற்று பயந்து தான் போனன். ஆனலும் அதை வெளியே காட்டாமல் தன் ஐந்து படைத்தலை வர்களான விருபாட்சன், யூபாட் சன், துர்த்தரன், பிரகசன், ஜாவ கர்ணன் என்பவர்களிடம் அனுமா ரைப் பிடித்து வரச் சொன்னன்.

அவர்களும் "ஆகா! அந்த வான ரத்தைப் பிடித்து விடுகிறோம். அவன் எப்படிப்பட்ட மாயாவியாக இருந்தாலும் சரி நாங்கள் கவனக் குறைவாக இருக்க மாட்டோம்''





என்ருர்கள்.

இராவணனும் "நானும் வாலி, சுக்கீரிவன், நீலன், துவிதீயன் முதலியன வானர வீரர்களைப் பார்த்திருக்கிறேன். ஆனல் இப்படிச் சக்தி வாய்ந்த வானரம் இருப்பதாகக் கேள்விப்பட்டது கூட இல்லை. இந்திரன் கடுந்தவம் செய்து இப்படிப்பட்ட சக்திவாய்ந்த பூதத்தை நம் மீது ஏவிவிட்டிருக்கிருனே என்னவோ? எதற்கும் நீங்கள் எச்சரிக்கையாக இருங்கள்" என்று கூறி அனுப்பி வைத்தான்.

இராவணனின் கட்டளைப்படி அவர்கள் ஐவரும் தம் ரதங்களில் ஏறிக் கொண்டு யானைப் படை, குதிரைப் படை, காலாட்படை எனப் பல படைகள் சூழ அனுமாரைத் தாக்கச் சென்ருர்கள். அவர்கள் அனுமார் இருந்த இடத்தை அடைந்து அவரைச் சூழ்ந்து கொண்டு பல வித ஆயுதங்களை கொண்டு அவரைத் தாக்கலானுர்கள்.

அனுமார் சிங்கம் போலக் கர்ஜித்தார். அவர் வானில் உயரக் கிளம்பி அவர்களது தாக்குதல்களிலிருந்து தப்பியவாறே சமாளிக்கலானுர். அப்போது துர்த்தரன் பல அம்புகளை அவர் மீது எய்தான். அனுமார் அவற்றைத் தடுத்ததோடு தம் உருவத்தைப் பெரிதாக்கி 'தொப்'பென்று துர்த்தரனின் ரதத்தின் மீது குதித்தார். அந்த அதிர்ச்சியில் அவனது ரதம் தூள் தூளாகியது. அவர் துர்த்தரனை ஒரே அடியில் கொன்ருர்.

அடுத்து அவர் ஒரு பெரிய மரத்தைப் பிடுங்கி அதால் விருபாட்சனையும் யூபாட்சனையும் அடித்துக் கொன்ருர். பிரகசனும் ஜாவகர்ணனும் அனுமாரை எதிர்த்தார்கள். அவர் ஒரு பெரிய பாறையைப் பெயர்த்து அதால் அவர்களை அடித்துக் கொன்ருர். அவர்களது படை வீரர்களையும் விட்டு வைக்கவில்லை. அவர்களையும் அடித்து அழித்துவிட்டு மறுபடியும் அசோக வனத்துத் தலைவாசலில் வந்து உட்கார்ந்தார்.

ஐந்து படைத்தலைவர்களும் இறந்து போனுர்கள் என்று கேட்டதும் இராவணனின் கோபம் அதி

கரித்தது. அவன் தன் இளைய மக ஞன அட்சயகுமாரனைப் பார்த்தான். அந்தக் குறிப்பை அறிந்த அவன் சட்டென எழுந்து தான் போய் அந்த வானரத்தைப் பிடித்து வருவ தாகக் கூறினன். அவன் தங்க ரதத் தில் ஏறி அனுமார் இருந்த இடத்தை அடைந்தான்.

எட்டுக் குதிரைகள் பூட்டப்பட்ட அவனது ரதம் பூமியைத் தொடா மல் அதற்கு மேல் ஒரு அடி உய ரத்தில் சென்று கொண்டிருந்தது. அதில் ஏராளமான ஆயுதங்கள் இருந்தன. அவன் அனுமாரைப் பார்த்ததுமே அவர் சாமான்னியப் பட்டவர் அல்ல என்று தெரிந்து கொண்டு விட்டான். அதனுல் அனுமாரைத் தாக்கத் தீவிர ஏற் பாடுகளைச் செய்யலானுன். அது முடிந்த பிறகே அவன் அனுமாரைத் தாக்கலானுன்.

அனுமாருக்கும் அட்சயகுமார னுக்கும் பலத்த சண்டை நடந்தது. அட்சய குமாரனின் தாக்குதல் தீவி ரம் ஆக ஆக அனுமாரின் உற்சாக மும் அதிகரித்தது. அவர் உயரக் கிளம்பி வானவீதியில் சஞ்சரித் தார். அட்சய குமாரனும் தனது ரதத்தோடு உயரச் சென்று அவரைத் தாக்கலானுன். அனுமார் அட்சய குமாரன் எய்த ஆயுதங்கள் தம்மைத் தாக்காதபடி தப்பித்து வந்ததோடு அட்சய குமாரனை எப்படி ஒழிப் பது என்று யோசிக்கலானுர்.



சிறுவனுக இருக்கும் போதே இவ்வளவு சக்திசாலியாக உள்ள அட்சய குமாரன் வளர்ந்து பெரிய வனுனுல் எப்படியெல்லாம் பயங் கரமாகப் போர் புரிவானே என அனுமார் எண்ணிப் பார்த்தார். அவனை இப்போதே ஒழிப்பது மேல் என நினைத்து அவர் சட்டென அவனது இருகால்களையும் பிடித்து உயரத்தூக்கி 'கிர் கிர்'ரென்று சுற் றித் தரைமீது பலமாக அடித்தார். அவ்வளவுதான், அட்சயகுமாரன் இறந்து போனுன்.

அட்சயகுமாரன் இறந்ததைக் கேட்டதும் இராவணனின் துக்க மும் கோபமும் அதிகரித்தது. அவன் துக்கத்தை அடக்கிக் கொண்டு தன் மூத்த மகனுன இந்திரஜித்திடம்



"இந்த வானரம் ஜம்புமாலியை யும் மந்திரிகுமாரர்களேயும், ஐந்து படைத்தலேவர்களேயும், அட்சய குமாரனேயும் மற்றும் கணக்கற்ற ராட்சஸ வீரர்களேயும் கொன்றிருக் கிறது. எனவே அதன்பலம் மிக அதிகமானது என்று தெரிகிறது. நீ போய் நன்கு கவனித்து அதனேப் பிடித்துவா. நீ இந்திரனேயே வென்ற வன். நீ மட்டும் போ சேனேகளே அழைத்துக் கொண்டு போக வேண் டாம். உன்னிடம் உள்ள அஸ்திரங் களால் நீ யாரையும் வென்று விடு வாய் என்பது எனக்குத் தெரியும். போய் வெற்றியுடன் திரும்பிவா" என்று கூறி அனுப்பினுன்.

இந்திரஜித்தும் இராவணனே வலம் வந்து வணங்கி "நீங்கள் கொஞ்சமும் கவலேப்படாதீர்கள். அந்த வானரம் எவ்வளவு பலசாலி யாக இருந்த போதிலும் என்னே எதிர்த்து நிற்க முடியாது. நான் அதனேக் கட்டிப் பிடித்து இழுத்து வந்து உங்கள் முன் நிறுத்துகிறேன்" என்று கூறிவிட்டுக் கிளம்பிச் சென் ருன். அவன் தன் தேரில் அமர்ந்து விரைவிலேயே அனுமார் இருந்த இடத்தை அடைந்தான். இந்திர ஜித் வருவதைக் கண்டதும் அனு மார் சிம்மநாதம் செய்தார். இந் திரஜித் அனுமார் மீது அம்புகளே எய்ய ஆரம்பிக்கவே அவர் உயரக் கிளம்பி வான வீதிக்குச் சென்ருர். அவரை இந்திரஜித்தின் அம்புகள் தாக்க முடியவில்லே. அவன் எய்த அம்புகளிலிருந்து அவர் தப்பித்துக் கொண்டே வந்தார். அதைக் கண்ட இந்திரஜித் மிகவும் வெறுப்படைந் தான். அனுமாரை அடித்து வீழ்த்து வது எளிதல்ல என்று கண்டான். எனவே அனுமாரைக் கட்டிப்போடு வதற்காக பிரம்மாஸ்திரத்தை எய் தான்.

அனுமார் பிரம்மாஸ்திரம் வரு வது கண்டு அதற்கு மரியாதை கொடுக்கும் வகையில் கட்டுப்பட்டு கீழே தரையில் விழுந்தார். மேலும் அவர் இராவணின் தர்பாருக்கும் போய் அவனேக் காணவும் விரும் பினுர். பிரம்மாஸ்திரம் தெய்வாம் சம் பொருந்திய தன்னே எதுவும் செய்யாது என்றும் அது எந்த

வேலைக்காக என்று அனுப்பப்பட்டதோ அதை மட்டுமே செய்யும் என்பதையும் அனுமார் அறிந்திருந்தார். எனவே அந்த அஸ்திரத்திற்குக் கட்டுப்பட்ட அவர் சற்றும் கவலைப்படவில்லை.

கட்டுண்டு கீழே விழுந்த அனுமாரை ராட்சஸர்கள் சிலர் ஓடி வந்து பிடித்துக் கொண்டார்கள். இந்திரஜித் அவரை இராவணனின் முன் கொண்டு போகும்படிக் கட்டளை இடவே ராட்சஸர்கள் அவரைக் குத்தியும் அடித்தும் தள்ளிக் கொண்டும் இராவணனின் தர்பாருக்கு இழுத்துச் சென்றார்கள்.

இந்திரஜித் அனுமாரை இராவணனின் தர்பாரில் இருந்தவர்களுக்குக் காட்டி "இதுதான் நமக்கு தொல்லைக் கொடுத்து வந்த வானரம்" என்று கூறினான். மதம் பிடித்த யானை போல் உள்ள அனுமாரை அங்குள்ளவர்கள் பார்த்து "யார் இந்த வானரன்? ஏன் இங்கு வந்தான்? இவனுக்கும் இலங்கையிலுள்ள வேறு யாருக்கும் ஏதாவது தொடர்பு உண்டா?" என்றெல்லாம் யோசிக்கலானார்கள்.

அந்தச் சபையில் நிறுத்தப்பட்டதும் அனுமார் இராவணனை ஏற இறங்கப் பார்த்தார். பிறகு சுற்றிலும் உள்ளவர்களை பார்த்தார் இராவணனின் கண்கள் நெருப்புத் துண்டம் போலச் சிவந்து இருந்தன. அனுமாரின் கட்டுகளை இந்திரஜித் தளரும்படிச் செய்தான்.

அப்போது இராவணனின் மந்திரிகள் அனுமாரிடம் "நீ இங்கே எதற்காக வந்தாய்" என்று கேட்டார்கள். அவரும் "நான் வானர மன்னரான சுக்கிரீவனின் தூதன். அவர் அனுப்பியதன் பேரில் இங்கு வந்தேன்" என்றார்.

"இவன் எதற்காக வந்தான்? ஏன் பூங்காக்களை அழித்தான்? ஏன் ராட்சஸப் பெண்களை பயமுறுத்தினான்? ஏன் ராட்சஸர்களைக் கொன்றான் என்று கேள்" என்று இராவணன் பிரகஸ்தனிடம் கூறினான்.





# மாறிய மனம்

பர்வதம்மாள் பணக்காரிதான். அவள் தன் கணவனை இழந்து சிறுவர்களாக இருந்த தன் நான்கு மகன்களையும் நல்ல விதமாக வளர்த்துப் பெரியவர்களாக்க வேண்டிய பொறுப்பை ஏற்க வேண்டியதாயிற்று. அவள் சிக்கனமாகக் குடும்பத்தை நடத்தித் தன் நான்கு மகன்களுக்குக் கல்யாணமும் செய்து வைத்தாள்.

வீட்டின் நிர்வாகம் எல்லாம் பர்வதம்மாளிடமே இருந்தது. அவள் சமைத்துப் போடுவதைத்தான் எல்லோரும் சாப்பிட வேண்டும். தோட்டத்தில் விளையும் கீரை காய்கறிகளில் ஏதாவதைக் கொண்டு ஒரு குழம்பு, மோர் இவைதான் தினமும் சாதத்தோடு பரிமாறப்படுவது. நான்கு மகன்களும் வாய் பேசாமல் தம் தாயார் போட்டதைச் சாப்பிட்டு வந்தார்கள். ஆனால் வீட்டிற்கு வந்த நான்கு மருமகள்களுக்கும் விதவிதமான பட்சணங்கள் செய்து சாப்பிட வேண்டும் என்று ஆசையாக இருந்தது.

அவர்கள் அது பற்றித் தம் மாமியாரிடம் கூற பயந்து தம் கணவன்களிடம் சொல்லிப் பார்த்தார்கள். ஆனால் எவ்விதப் பலனும் ஏற்படாதது கண்டு அவர்கள் என்ன செய்வது என்று மனம் குமுறிக் கொண்டிருந்தார்கள்.

அவர்களுக்கு அதிர்ஷ்டம் அடிப்பது போலப் பர்வதம்மாளுக்கு அடுத்த கிராமத்திலிருந்த அவளது தம்பியிடமிருந்து அவசர அழைப்பு வந்தது. அதனால் மறுநாள் காலையில் அவள் கிளம்பிப் போகப் போவதாகக் கூறினாள்.

நான்கு மருமகள்களுக்கும் ஒரே குஷி. மறுநாள் தம் மாமியார் கிளம்பிப் போனதுமே தமக்கு விருப்ப

—எஸ். சோபினி—




விடலாம்'' என்று கூறிக் கலைந்து சென்றார்கள். அவர்கள் பேசியதை எல்லாம் தற்செயலாக அங்கு வந்த பர்வதம்மாள் மறைந்து நின்று கேட்டு சிரித்துக் கொண்டாள்.

மறுநாள் காலை பர்வதம்மாள் வண்டி பூட்டிக் கொண்டுத் தன் தம்பியின் ஊருக்குக் கிளம்பி சென்றாள். மாமியார் கிளம்பிப் போனதும் மருமகள்கள் நால்வரும் தாம் விரும்பியவற்றைத் தயாரிக்க சாமான்களை வரவழைத்தனர். அவரவர்கள் தாம் விரும்பியவற்றைத் தயாரிக்க மாவு அரைத்தும் பருப்புகளை உடைத்தும் எடுத்து வைத்துக் கொண்டனர். தம் கணவன்மார்களுக்கும் இரண்டு காய் இரண்டு கூட்டு, சாம்பார், ரசம், பச்சடி, அப்பளம் ஊறுகாய் என்று பரிமாறினார்கள் அவர்களும் ''ஆகா! இன்று சமையல் பிரமாதம். எங்கள் வாழ்க்கையில் ஒருநாள் கூட இந்த மாதிரி சாப்பாடு சாப்பிட்டதே இல்லை. உங்கள் மாமியார் இல்லாததால் இப்படி ருசியானவற்றைச் செய்து விட்டீர்கள். சபாஷ்'' என்று கூறிப் பாராட்டு தல்களையும் அளித்தார்கள்.

சாப்பாடு முடிந்ததும் முதல் மருமகள் அடுப்பில் நெய் காய்ச்சினாள். நெய்வாசனை வீடு முழுவதும் 'கம்' மென்று வீசியது. நெய்யை அடுப்பிலிருந்து இறக்கும் போது யாரோ வாசல் கதவைத் தட்டுவதைக் கேட்டு

மானவற்றைச் செய்து சாப்பிடுவது என்று அவர்கள் இரவில் கொல்லையில் துளசி மாடத்தருகே கூடிப் பேசினார்கள். முதலாவது மருமகள் தனக்கு நெய்ப்பணியாரம் பிடிக்கும் என்றாள். இரண்டாவது மருமகள் தனக்கு முந்திரிப் பருப்பு உருண்டை பிடிக்கும் என்றாள். மூன்றாவது மருமகள் தனக்குப் பதிர்பேணி பிடிக்கும் என்றாள். நான்காவது மருமகளோ தனக்கு பாதாம் ஹல்வா என்றால் மிகவும் பிடிக்கும் என்று நாக்கைச் சப்பை கொட்டினாள்.

நால்வரும் ''நாளை மாமியார் ஊருக்குப் போனால் திரும்பி வர இரண்டு நாட்களாவது ஆகும். அதற்குள் நாம் இஷ்டப்பட்டதைச் செய்து திருப்தியாகச் சாப்பிட்டு

ஒரு மருமகள் ஓடிப் போய் கதவின் இடுக்கு வழியாகப் பார்த்தாள். வாசலில் தன் மாமியார் வந்து நிற்பது கண்டு உடனே ஓடி மற்ற மருமகள்களிடம் மாமியார் வந்துவிட்டார் எனவே அவர்கள் பரபரவென்று தாம் தயாரித்து வைத்திருந்த சாமான்களை எல்லாம் எடுத்து ஒளித்து வைத்துவிட்டார்கள்.

இதன்பிறகு ஒருத்தி போய் வாசல் கதவைத் திறக்கவே பர்வதம்மாளும் "ஆ... என்ன வெயில்! என்னால் தாங்க முடியவில்லை. அதனால் என்தம்பியின் ஊருக்குப் போகாமல் திரும்பி விட்டேன். ஆமாம் என்ன நெய் வாசனை?" என்று கேட்டாள். முதல் மருமகள் "வீட்டில் நெய் இருக்கவில்லை. இப்போதுதான் காய்ச்சினேன்" என்று சமாளித்தாள்.

பர்வதம்மாளும் "நெய் என்றதும் இன்று என் பயணத்தின்போது நடந்த ஒரு வேடிக்கையான சம்பவம் நினைவிற்கு வருகிறது. அதைச் சொல்கிறேன்" எனவே நான்கு மருமகள்களும் அவளைச் சுற்றி உட்கார்ந்து கொண்டு "சொல்லுங்கள் கேட்கிறோம்" என்று உற்சாகத்துடன் கூறினார்கள்.

"என் வண்டி ஒரு காட்டின் வழியே போய்க் கொண்டிருந்தது. அப்போது நம் வண்டி மாடுகளில் ஒன்றின் காலில் பெரிய முள் குத்தி விட்டது. அதனால் நடக்க முடியவில்லை. நம் வண்டிக்காரன் அதன் முள்ளை எடுப்பதில் முனைந்து விட்டான். நான் சற்று தூரத்தில் ஒரு பாழடைந்த மண்டபம் இருப்பது





கண்டு அங்கு போய் உட்கார்ந்தேன். அப்போது திடீரென நெய்ப் பணியார வாசனை அடித்தது" என்று மாமியார் கூறி நிறுத்தவே முதல் மருமகள் நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

அது கண்டு பர்வதம்மாள் சிரித்தவாறே "அந்த வாசனை எங்கிருந்து வருகிறது எனப் பார்க்க எழுந்து சென்றேன். சற்று தூரத்தில் பதிர்ப் பேணிகள் குவிக்கப்பட்டிருந்தன. பார்க்க முட்டைகள் போலிருக்கவே அவை எவற்றின் முட்டைகளோ என்று எண்ணித் திகைத்தேன். அங்கிருந்து இரண்டடி எடுத்து வைத்ததும் நான் திகைத்துப் போய் நின்றேன்" என்றாள்.

அப்போது பதிர்ப்பேணியை மிகவும் விரும்பும் மூன்றாவது மருமகள் "அங்கே என்ன இருந்தது?" என்று கேட்டாள் ஆர்வத்துடன்.

பர்வதம்மாளும் "அதைத்தானே சொல்ல வந்தேன். அங்கே பாதாம் ஹல்வா நிறத்தில் ஒரு நல்லபாம்பு படம் விரித்து ஆடிக்கொண்டிருந்தது. அதன் படம் பெரிதாக இருந்தது" என்று கையால் அளவு காட்டினாள்.

அதைக் கேட்ட பாதாம் ஹல்வா விரும்பும் மருமகள் முகத்தைச் சுளித்துக் கொண்டு "அப்புறம் என்ன நடந்தது?" என்று கேட்டாள். பர்வதம்மாளும் கூறலானாள்.

"அந்தப் பாம்பைப் பார்த்து பயந்து போய் விட்டேன். அங்கிருந்து ஓடிப்போய் விடலாம் என நினைத்துத் திரும்பிய போது அங்கே ஒரு யோகி வந்தார். அவர் கையில் வாழை இலையில் ஏதோ சுற்றி எடுத்து வந்த பொட்டலம் இருந்தது. நான் பயந்து நிற்பதைக் கண்ட அவர் "இது தேவலோகப் பாம்பு பாதாம் ஹல்வா நிறத்தில் இருக்கும். இது உள்ள இடத்தில் நெய்ப் பணியார வாசனை அடிக்கும். இதன் முட்டைகள் பதிர்ப்பேணி போல இருக்கும்" எனக்கூறித் தன் கையிலிருந்த பொட்டலத்தைப் பிரித்து அந்தப் பாம்பின் மேல் வைத்தார். அந்தப் பொட்டலத்தில் என்ன இருந்தது தெரியுமா? சர்க்கரைப் பாகில் செய்த முந்திரிப்பருப்பு உருண்டைகள்."

இவ்வாறு மாமியார் கூறியதும் இரண்டாவது மருமகள் "முந்திரிப் பருப்பு உருண்டைகளா?" என்று ஆச்சரியத்துடன் கேட்டாள். பர்வ தம்மாளும் "ஆமாம் அந்தப் பாம்பு அதனை வாசனை பார்த்ததும் அவர் அதனை அதன் பிரசாதமாக எடுத் துக் கொள்வாராம்" என்றாள்.

அப்போது அந்த நான்கு மருமகள் களுக்கும் தேள் கொட்டியது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. தம் மாமியார் தம் நால்வரையும் வைத்து ஒரு கற்பனை கதையையே புனைந்து விட்டார் எனப் புரிந்து கொண்டார்கள். தம் மாமியாருக்கு தாம் முந்தின இரவு பேசியது தெரிந்து விட்டது என்றும் அத ளுல் அவற்றைக் கொண்டு அழகா கக் கோர்வையாக ஒரு சம்பவம் நடந்தது என்று கூறிவிட்டாள் என்றும் புரிந்து கொண்டார்கள். அவர்கள் நால்வரும் தம் மாமியா ரின் கால்களில் விழுந்து தம்மை மன்னிக்கும்படி வேண்டினர்கள்.

அப்போது பர்வதம்மாள் "அடி அசடுகளா! இதை எல்லாம் என்னி டம் சொல்லி இருந்தால் நான் செய்து கொடுக்க மாட்டேனு! சரி. நீங்கள் அவசர அவசரமாக ஒளித்து வைத்ததைக் கொண்டு வாருங்கள். நான் நெய்பணியாரம், முந்திரி பருப்பு உருண்டை, பதிர்ப்பேணி, பாதாம் ஹல்வா எல்லாம் செய்து கொடுக்கிறேன்" என்றாள்.

நால்வரும் அவற்றைக் கொண்டு வரவே பர்வதம்மாளும் "நானும் ஒரு அசடுதான். சின்னம் சிறிசு கள் இதெல்லாம் தின்ன ஆசைப்படு வார்கள் என்பதை இவ்வளவு நாட் களாக அறியாமல் போனேனே. இனிமேல் உங்கள் மனம் குளிர எல்லாப் பட்சணங்கள் செய்து கொடுக்கிறேன். இனிமேல் நீங் கள் ஒளிவு மறைவாக இப்படியெல் லாம் பட்சணங்கள் தயாரிக்க முயல வேண்டாம்" என்றாள்.

அதைக் கேட்டு நான்கு மருமகள் களும் பூரித்துப் போனர்கள்.





# அது ஏனச் சிரிப்பு!

ஒரு நாள் காஷ்மீர நாட்டு அரண் மனைக்கு மீனவப் பெண் ஒருத்தி தன் மீன்களை விற்கக் கூடையுடன் சென்றாள். ராணி அந்தக் கூடை மீன்களைப் பார்த்த போது ஒரு மீன் துள்ளிக் குதித்தது. அதைக் கண்ட ராணி அந்தப் பெண்ணிடம் "இந்த மீன் ஆணு, பெண்ணு?" என்று கேட்டாள். அப்பெண்ணும் "என் கூடையில் உள்ளவை எல்லாம் ஆண் மீன்களே" என்றாள்.

அதைக் கேட்ட ராணி "என் அந்தபுரத்தில் ஆண்களே இல்லை. அதனால் இந்த மீன்களை வேண் டாம்" என்றாள். அப்போது கூடை யில் துள்ளிக் கொண்டிருந்த மீன் பலமாக சிரித்தது. அதனால் ராணி மிகவும் கோபம் கொண்டு தன் அறையில் போய்ப்படுத்து விட்டாள்.

ராணியைக் காண வந்த ராஜா அவள் கோபத்தோடு இருப்பது கண்டு அவனிடம் அதற்குக் கார ணம் என்ன என்று கேட்டார். ராணியும் "கேவலம் ஒரு மீன் என் னைப் பார்த்துச் சிரித்தது. இது ஏன்?" என்று கேட்டாள். ராஜா வுக்கு அதற்கான காரணம் தெரி யாததால் தன் மந்திரியை அழைத்து "ராணியைப் பார்த்து ஒரு மீன் சிரித்தது. அதற்கு என்ன காரணம் என்பதை நீங்கள் ஒரு மாதத்திற் குள் கூறவிட்டால் உங்கள் தலை வெட்டப்படும்" எனக்கூறி அனுப் பினர்.

மந்திரி கவலை தோய்ந்த முகத் தோடு தன் வீட்டிற்குச் சென்றார். பல பண்டிதர்களையும் சோதிடர் களையும் மந்திரவாதிகளையும் அழைத்து அக்கேள்விக்கு விடை என்ன என்று கேட்டார். யாரா லும் அதற்கு விடைகூற முடிய வில்லை. மந்திரியின் மகன் மகேந்

—காஷ்மீர நாட்டுப் பழங்கதை—

திரன் கெட்டிக்காரன். அவன் தன் தந்தையின் கேள்விக்கு விடை கண்டு வருவதாகக் கூறி வீட்டை விட்டுக் கிளம்பிச் சென்றான்.

சில நாட்கள் பயணம் செய்த பின் அவன் ஒரு கிழக்குடியான வனை வழியில் கண்டான் அக்கிழவ னும் மகேந்திரனுடன் சேர்ந்து வழி நடக்கலானான். கொஞ்ச தூரம் போனதும் மகேந்திரன் கிழவனிடம் "நாம் ஒருவர் தோளில் மீது மற்ற வர் உட்கார்ந்து போனால் சிரமம் தெரியாதல்லவா?" என்றான்.

கிழவன் அதற்கு பதில் கூற வில்லை. தன்னோடு வரும் இளைஞ னுக்கு மூளை கலங்கி இருக்கிறது என நினைத்தான். சற்று தூரம் போன தும் மகேந்திரன் அறுவடைக்குத் தயாராக உள்ள வயலைக் காட்டி "இதற்குத் தீனி இன்னும் கிடைக்க வில்லையா?" என்றான்.

அப்போதும் கிழவன் அவனை ஒரு பைத்தியம் என்று நினைத்துப் பதில் கூறவில்லை. சற்று தூரம் போனதும் ஒரு காடு வந்தது. அப் போது மகேந்திரன் தன் கத்தியை எடுத்துக் கிழவனிடம் கொடுத்து "இதைக் கொண்டு இரண்டு குதிரை களைக் கொண்டு வருகிறாயா? நமக்கு அவை மிகவும் உபயோக மாக இருக்கும். ஆனால் கத்தியைத் தொலைக்காமல் கொண்டு வா. இது விலை உயர்ந்தது" என்றான்.

கிழவனோ பைத்தியத்தோடு



என்ன பேச்சு என்று நினைத்துப் பதில் கூறவில்லை. சற்று நேரத்தில் அவர்கள் ஒரு நகரில் நுழைந்து அதைக் கடந்தார்கள். அந்நகரவாசி களில் ஒருவன் கூட அவர்களிடம் பேசவில்லை. அப்போது மகேந்தி ரன் "இது ஒரு பெரிய மயானம்" என்றான். அது கேட்டு கிழவன் சிரித்தவாறே நடந்தான்.

நகரைக் கடந்து சற்று தூரம் போன போது ஒரு சுடுகாட்டின் எல்லையை அவர்கள் அடைந்தார் கள். அங்கு யாரோ ஒரு பணக்கார னின் தகனக்கிரியை முடிந்து அவர் ஆத்மா சாந்தி அடைய வழியில் போவோர் வருவோர்க்கு இனிப் புப் பண்டங்களை வழங்கிக் கொண்டி ருந்தனர். கிழவனுக்கும் மகேந்திர



அனுப்பு. வந்து சாப்பிடுகிறேன்'' எனக்கூறவே கிழவன் அவனை முற்றிய பைத்தியம் என எண்ணிக் கொண்டு தன் வீட்டிற்குச் சென்றான்.

வீட்டை அடைந்ததும் அவன் தன் மகள் ரூபாவிடம் மகேந்திரனைச் சந்தித்ததையும் வழியில் அவன் பேசியதையும் கூற ''இந்த மாதிரி ஒரு பைத்தியம் உண்டா?'' என்றான். ரூபாவோ ''அப்பா! அவர் பைத்தியம் இல்லை. மிகவும் புத்தி சாலி. 'அவர் சூசகமாகச் சொன்னது எல்லாம் உங்களுக்குப் புரியவில்லை. ஒருவரை மற்றவர் சுமப்பது என்றால் சிரமம் தெரியாமல் இருக்கக் கதை சொல்லிக் கொண்டு நடப்பது என்பதே. வயலுக்குத் தீனி கிடைக்கவில்லையா என்றால் இன்னமும் பயிர் விளை போகவில்லையா என்று பொருள். காட்டில் கத்தியைக் கொடுத்து இரண்டு குதிரைகளைக் கொண்டு வரச் சொன்னது. இரண்டு மரக்கிளைகளை வெட்டித் தடிகளாகக் கொண்டு வரச் சொன்னதே. அடுத்து நகரத்தை மயானம் என்று கூறியது அங்கு ஒருவன்கூட மனிதாபிமானத்துடன் நடந்து கொள்ளாததே. மயானத்தில் கூடியவர் தானதர்மம் செய்தது ஒரு ஊரில் நடப்பது போல. வாய்க்காலில் செருப்போடு நடந்தது அதில் முள் இருந்து குத்துமோ அல்லது விஷப் பூச்சிகள் இருந்து கடிக்குமோ என நினைத்துத்தான். நம்வீடு உறுதியாக

னுக்கும் அது கிடைத்தது. மகேந்திரன் அதனைச் சாப்பிட்டு விட்டு ''இந்த இடத்தில் ஒரு நகரமே இருக்கிறதே'' என்றான்.

சற்று நேரம் கழித்து அவர்கள் ஒரு வாய்க்காலை அடைந்தார்கள். கிழவன் தன் செருப்புகளைக் கழற்றிக் கையில் எடுத்துக் கொண்டு வாய்க்காலைக் கடந்தான். மகேந்திரனோ செருப்புக் காலுடன் நீரில் இறங்கிச் சென்றான்.

அதற்குச் சற்று நேரத்தில் குடியானவனின் ஊர் வந்தது. குடியானவன் மகேந்திரனைத் தன் வீட்டிற்கு வந்து சாப்பிடும்படி அழைத்தான். மகேந்திரனோ ''நான் இங்கே சத்திரத்தில் தங்குகிறேன். உன் வீடு உறுதியானது என்றால் சொல்லி

உள்ளதா என தெரிவிக்கச் சொன்னது நாம் வறுமையில் வாடாமல் இருக்கிறோமோ என அறியவே'' என்றாள்.

குடியானவனும் ''ஓ! அவன் இவ்வளவு கெட்டிக்காரனா? அவனை அழைத்து வர நம் வீட்டு வேலையாளை அனுப்புகிறேன்'' என்றான். அப்போது ரூபா அந்த வேலையாளிடம் ஒரு கிண்ணி நிறைய நெய்யையும் பனிரெண்டு சம்பாத்திகளையும், ஒரு கலயத்தில் பாலும் கொடுத்து ''இவற்றையும் இந்தக் கடிதத்தையும் நம் ஊர்ச்சத்திரத்தில் தங்கியுள்ள மகேந்திரன் என்பவரிடம் கொடு'' என்றான்.

வேலையாள் அவற்றை எடுத்துக் கொண்டு போனபோது வழியில் அவனது மகன் வந்தான். அவன் தந்தையிடம் சப்பாத்தி, பால் இருப்பதை பார்த்து ஒரு சப்பாத்தியை எடுத்து எல்லா நெய்யைத் தடவி சாப்பிட்டான். பிறகு பாலைக் கொஞ்சம் குடித்து விட்டு அனுப்பினான்.

வேலையாள் தான் கொண்டு சென்ற பொருள்களையும் கடிதத்தையும் மகேந்திரனிடம் கொடுத்தான். கடிதத்தில் ''நண்பரே சந்திரன் முழுமையாக இருக்கிறான். ஒரு ஆண்டிற்குப் பனிரெண்டு மாதங்கள் கடல் பொங்கிவழியும் நிலையில் உள்ளது'' என்று எழுதியுள்ளதை அவன் படித்தான்.

மகேந்திரனும் அந்த வேலையாள்



கொண்டு வந்த பொருள்களைப் பார்த்துவிட்டு ''அமாவாசையாதலால் சந்திரன் தென்படவில்லை. ஒரு ஆண்டிற்கு பதினோறு மாதங்கள் என்றே எனக்குத் தோன்றுகிறது. கடல் கொஞ்சம் வற்றிப் போயிற்று'' என்று ஒரு கடிதத்தில் எழுதி அந்த ஆளிடம் கொடுத்து அனுப்பினான்.

கடிதத்தை வேலையாள் தந்ததும் அதனைப் படித்த ரூபா ''நீ கொண்டு போன நெய்யும் ஒரு சப்பாத்தியும், பாலில் கொஞ்சமும் என்ன ஆயிற்று? யாருக்குக் கொடுத்தாய்?'' என்று கேட்டாள். அப்போது அவன் தன் மகன் அவற்றை எடுத்துச் சாப்பிட்டதை ஒப்புக் கொண்டான்.

கிழவன் சத்திரத்திற்குப் போய் மகேந்திரனைத் தன் வீட்டிற்கு அழைத்து வந்தான். மகேந்திர னும் ரூபாவும் வெகு நேரம்வரை பேசிக் கொண்டிருந்தார்கள். முடி வில் மகேந்திரன் தான் வீட்டை விட்டுக் கிளம்பிய காரணத்தைக் கூறினன்.

ரூபாவும் "அந்த ஆண் மீன் சிரித்த காரணம் ராணியின் அந் தப்புரத்தில் ஒரு ஆண்மகன் ஒளிந் திருப்பதால்தான். இதை நானே உங்களோடு வந்து ராஜாவுக்கு நிரூபித்துக் காட்டுகிறேன்" என் ருள். மறுநாள் மகேந்திரனும் ரூபா வும் கிளம்பித் தலைநகருக்குச் சென் ருர்கள். மகேந்திரன் தன் தந்தை யிடம் ரூபா கூறியதைச் சொன்னன். அப்போது மந்திரி அவளிடம் "நீ அதை எப்படி நிரூபிக்கப் போகி ருய்?" என்று கேட்டார்.

அவளும் "ஒரு நீளமான குழி வெட்டி அதனை அந்தப்புரத்தி லுள்ள பெண்களை எல்லாம் தாண் டச் சொன்னல் உண்மை தெரிந்து விடும்" என்ருள். மந்திரி ராஜா விடம் விஷயத்தைக் கூறவே அவ ரும் மகிழ்ந்து அரண்மனைத் தோட் டத்தில் நீளமான குழியை வெட் டச் செய்தார்.

அந்தப்புரப் பெண்கள் எல் லோரும் வரவழைக்கப்பட்டு அந்தக் குழியை அவர்கள் தாண்ட வேண் டும் என்று ராஜா கூறினர். ஒருத் தியைத்தவிர மற்றவர்கள் தயங்கி னர். அந்த ஒருத்தி மட்டும் ஓடி வந்து அக்குழியைத் தாண்டினள். அப்போது ரூபா "இவள் பெண் அல்ல. பெண் வேஷத்தில் உள்ள ஆண்" என்ருள். விசாரணையில் அவன் ஏமாற்றியது தெரிந்தது. ராணி அவனுக்கு தண்டனை விதித்து ரூபாவின் அறிவுத் திறனைப் பாராட் டினள்.

ராஜா மந்திரிக்கு ஏராளமான பரிசுகளை அளித்தார். மகேந்திரன் ரூபாவை மணந்து கொண்டு சுக மாக வாழ்ந்தான்.






டினோசார்கள் எல்லாம் ராட்சஸ உருவம் பெற்றவை அல்ல. மிகச்சிறிய டினோசார் பறவை போல உள்ளது. இதன் நீளம் இரண்டே அடிதான்.

## மறைந்துள்ள ஆபத்து



கடல் நீரைவிடப் பனிக்கட்டி குறைவான திண்மை உள்ளதால் இத்தகைய பனிக்கட்டிகளின் எட்டில் ஏழு பகுதி கடல் நீர்மட்டத்தின் கீழேயே இருக்கும் இவற்றைப் பனிக்குன்றுகள் எனலாம்.

## முள்ளே ஆகாரம்

காலப்போகோ தீவிலுள்ள இருன்னா எனப்படும் ஒருவகைப் பிராணி சப்பாத்திக் கள்ளியையே தன் உணவாகக் கொள்கிறது.



# PAINT YOUR OWN DREAMS!

AND WIN A FREE TRIP TO THE USSR!

**A special contest for JUNIOR QUEST subscribers!**

Hi kids! What's your DREAM WORLD like? Is it a world where stormy seas turn into milk and honey? And dark clouds become beautiful butterflies?

Well, here's your chance to say why friends, animals, flowers, laughter and other beautiful things make this world a great place to live in!

Just make a colourful picture of your own DREAM WORLD. Use paints, colour pencils, crayons or felt pens. ( Maximum paper size 20 cm.x 45 cm.) On another paper complete the following : " The world would be a better place if ................". (Less than 50 words, in English only).

Remember, even the most impossible dream could be a winner. And some day, perhaps,it could even come true!

**Last date - September 30, 1991**

Mail your entries to:
DREAM WORLD CONTEST
C/O Junior Quest, Chandamama Building,
Vadapalani, Madras 600 026.

**DREAM WORLD PRIZES**

- One free trip to the USSR and back
- 50 Gift cheques of Rs 100 each
- Extra-special JQ T-shirts




C.O.N.T.E.S.T

JUNIOR QUEST
*Where finding out is fun*

RULES • Contest open to all current Junior Quest subscribers, and to all those who subscribe before September 30, 1991. • All entries must be accompanied by the special Dream World Contest coupon, available in the July, August and September 1991 issues of Junior Quest.Along with your current subscription number or a subscription coupon. • In case of a tie, a lucky draw decides who wins the free trip to the USSR. • The decision of the judges will be final and binding • We will not be responsible for entries lost or damaged. Incomplete entries will be disqualified. • Entries become the property of the Chandamama Vijaya Combines Publications Division, with the right to publish any of the winning entries. • The results will be published in a future issue of Junior Quest. • The winner is responsible for all passport and Reserve Bank formalities.

HTA 7932

## போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 50

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1991 நவம்பர் மாத இதழில் வெளியிடப்படும்**



S. S. Ghatege



K. P. A. Swamy

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ செப்டம்பர் 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும். ★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 50/—பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க் கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026

---

### ஜூலை மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : அணைத்துக் கொடுப்பதில் பூரிப்பு

இரண்டாவது போட்டோ : அழைத்துக் கொடுப்பதில் விருப்பு

பரிசு பெற்றவர் : க. ஸ்ரீநித்யா, பழவூர்

பரிசுத் தொகை ரூ. 50/-ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பி வைக்கப்படும்.




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.


---

# Cuddles always say "I love you."

Show your little ones how much you love them! And is there a better way of doing that than giving them a huggable, cuddlable playmate?

Cuddles. From the people who have given children the delightful entertainer of a magazine, Chandamama. Cuddles. A whole new range of stuffed toys. And, your old favourites. And, cute surprises being introduced regularly. Each one a sweet, adorable companion to your child. Absolutely safe. Designed to withstand childhandling.

Well, the fun and excitement of the festive season is just round the corner. Make it memorable for your child with a special gesture. With a Cuddle.

- CUDDLES — Stuffed toys from Chandamama.
- SAMMO — Mechanical and electronic toys from Chandamama

**CUDDLES**

Manufactured in technical collaboration with Sammo Corporation South Korea

**CHANDAMAMA TOYTRONIX**

Chandamama Toytronix Private Limited, Chandamama Buildings, Vadapalani, Madras - 600 026

*from*

**THE HOUSE OF**

**CHANDAMAMA**

Mudra M CTPL 4274

**CUDDLES AND SAMMO TOYS WILL BE AVAILABLE AT ALL LEADING TOY OUTLETS EXCEPT IN THE STATES OF ASSAM, HIMACHAL PRADESH, MADHYA PRADESH AND NORTH EASTERN STATES**

AMBULIMAMA (Tamil) September 1991 Regd. No. M. 4863